உ
ஓம்
பரப்பிரஹ்மணேநமஃ

# ஆனந்தபோதினி

“ எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு ”—திருவள்ளுவர்.



தொகுதி 13 } பிரபவஹு புரட்டாசிமீ கஉ } 1927ஹு செப்டம்பர்மீ 17உ { பகுதி 3

## கடவுள் வணக்கம்.

சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்று மெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
சதாநிஷ்டர் நினைவ தில்லை
சிந்தையறி யார்க்கீது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க்க மாம்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்ய ரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள
ரிருக்காதி வேத முனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க
ளிரவிமதி யாதி யோர்கள்
கந்தருவர் கின்னரர்கள் மற்றையர்க ளியாவருங்
கைகுவித் திடு தெய்வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே. (1)

கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவு ளுனைக் காணவே காயமாதி
புலங்காணர் நானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய். (2)

நடக்கினு மோடினு நிற்கினும் வேறொரு நாட்டமின்றிக்
கிடக்கினுஞ் செவ்வி திருக்கினு நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்ச மனமற்ற பூரணத் தொட்டிக்குளே
முடக்குவன் யான்பர மாநந்த நித்திரை மூடிடுமே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. "மனிதர் எதை நினைக்கின்றார்களோ அதுவேவந்து முடியுமென்று வேதம் கூறும்; ஆதலின், சகசநிஷ்டையுடையார், உலகத்திலிருந்தாலும் மரணமுண்டென்பதை நினைக்கவேமாட்டார்கள்; அதனால் அவர்கள் சிவானுபூதிபெற்று நித்தியாத்துமாக்களாய் விளங்குவார்கள். உண்மைக்கருத்துணராதார்க்கு இது போதிக்கத்தக்கதன்று; இதைக் கூறினும் அவரிடத்தே தர்க்கமே யுண்டாகும்; அங்ஙனம் அவர்கள் தர்க்கித்து இதனை ஒப்புக்கொள்ளார்கள். அவர்கள் அப்படியானால், அவ்வாறு சிவானுபூதியடைந்த மார்க்கண்டர், சுகர் முதலியவர்கள் முடிவுசெய்யப்பட்ட நித்தியாத்துமாக்கள் அல்லரோ? அவர்கள் அவ்வாறு மரணசிந்தனையின்றிச் சிவயோகத்தால் நித்தியாத்துமாக்களானபடியால் அவர்களின் நிலையிலிருப்பார்க்கு அவர்கள் பெற்றபேறு கிடைக்கும்" என்பது இதன்கருத்து. இங்ஙனம் கூறியதனால், ஆசிரியர், தமக்கும் அவ்வுயரியநிலை கிடைக்கவேண்டுமென்று கடவுளைத் தியானிக்கின்றாரென்பது குறிப்பால் விளங்கும்.

ஒருவன் யாதாயினு மொன்றினிடத்தே சிறிதேனும் பற்றுவைப்பானாயின், அப்பற்றினை யனுபவித்தற்குப் பிறவியென்னும் வலையுள் அகப்படுவானாதலின், "சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது தான்வந்து முற்றும்" என்றனர் ஆசிரியர். மரணமுண்டென்று நினைப்பதும் ஒருவகைப் பற்றாகையினாலும், அதனை நினைப்பார்க்கும் பிறவித் துன்ப முண்டாமாதலினாலும், அதனைச் சிவயோகிகள் எண்ணுவதில்லை. ஆதலின், "மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லை" என்றார். எல்லாஜீவகோடிகளும் இறைவனையே உபாசித்துவருதல் இயற்கையாதலின், "இந்திராதி தேவதைகள்......கின்னரர்கள் மற்றையர்க ளியாவரும் கைகுவித்திடுந் தெய்வமே" என்றனர்.

சதாநிஷ்டர்—தமது திருமேனி உருவச்சித்தி, அருவச்சித்தி, உருவருவச்சித்தியென்னும் மூன்றி லொன்றினைப்பெற்ற சீவன் முத்தர்கள்.

2. "கலங்காநெஞ்சுடைய ஞானிகள், கடவுளாகிய உன்னைக் காணும் பொருட்டு உடல் முதலியவற்றைக்கண்டு மதியார்; நான் வாசாஞானம் பேசிப் பொய்யுடலைக் காத்திருந்தது என்ன புதுமை" என்பது இதன்கருத்து. இதனால் தம்முடைய அறியாமையைக்கூறி, அதனை விலக்கித் தமக்கு ஞானத்தை உண்டாக்குமாறு கடவுளை வேண்டுகிறார் ஆசிரியர்.

காயம்—உடல்.

புலம்—இடம்.

3. இதில், "நான் எந்நிலையிலிருப்பினும் என் மனம், உனது திருவருட் சம்பந்தமான விசாரணையில் கட்டுப்பட்டிருக்கும்; யான் மனமிறந்த பூரணமாகிய தொட்டிற்குள்ளே அடங்கியிருப்பேன்; சிவானந்தமாகிய யோக நித்திரை அடியேனை மூடிக்கொள்ளும்" என்று தமது சிவானந்தானுபவ நிலையை ஆசிரியர் விளக்கியிருக்கிறார்.

உண்மையடியார்கள், எப்போதும் இறைவனையே சிந்தித்துக்கொண்டிருப்பாராதலின் "நடக்கினுமோடினும்.......என்னெஞ்சம்.......நல்லருட் கேள்வியில் தொடக்கும்" என்றனர்.

செவ்விது—சுகமாக.

தொடக்கும்—கட்டுப்படும்.

மனம் அற்றபூரணம்—மனமொடுங்கி ஆனந்தம் நிறைந்தநிலை.

*




## தெய்வ பலமும் மனித பலமும்.

கடவுளுடைய வல்லமையை அளவிடுதல் எவராலு மியலாது; அவர் சர்வசக்தியு முடையவர்; உலகங்களை உண்டாக்க நினைக்கும்போது உண்டாக்குவார்; காக்கக் கருணைகொண்ட போது காத்தருளுவார்; மறைக்க நினைந்தால் மறைப்பார்; மீண்டும் தோற்றுவிக்க நினைத்தபோது தோற்றுவிப்பார்; மற்றையரால், நினைக்கவும் செய்யவும் முடியாத அபாரச் செயல்களை யெல்லாம் செய்வார்; அவரால் நடைபெறாதது எதுவுமில்லை. ஆதலின் எல்லா வல்லமையும் கடவுளுக்கே உண்டு. அத்தகைய இணையற்ற வல்லமையே தெய்வபலமென்று சொல்லப்படும்.

இத்தகைய கருணாநிதியாகிய கடவுளால் மனிதர்க்கு அவரவரின் கர்மானுசாரமாகச் சில அனுகூலங்கள் அளிக்கப்படுகின்றன. அவர், சிலருக்கு அளவற்ற ஐசுவரியத்தையும், சிலருக்குத் தேகதிடத்தையும் மனோதிடத்தையும் கொடுக்கின்றார். இவற்றால் அரும்பெருஞ் செயல்களையும் செய்யக்கூடிய ஆற்றல் அம்மனிதர்க்கு உண்டாகின்றது. இது கடவுளால் அவர்களுக் கருளப்பட்ட பொருள் தேகதிடம் முதலியவற்றால் ஏற்படக்கூடியதாயிருந்தாலும் அவர்கள் மூலம் நடைபெறுவதால் மனிதபலமென்று பெயர் பெறுகின்றது.

இவ்வாறு கடவுளால் அருளப்பட்ட பொருளாலும், தேகக்கட்டாலும் கிடைத்த மனிதபலத்தை அறிஞர் நிலையற்றதென நினைந்து நன்னெறிகளிற் செலுத்தித் தர்மகாரியங்களிற் பயன்படுத்தி இம்மையிற் கீர்த்தியையும், மறுமையில் உயர்ந்த பதவிகளையுமடைந் தின்புறுகின்றனர். அறிவற்றார் சிலரோ, அந்தப்பலம் எப்பொழுதும் நிலைத்திருக்குமென் றெண்ணி அதனைத் துர்க்காரியங்களில் உபயோகிக்கிறார்கள். தமக்கு வல்லமையிருக்கிறதென்று செருக்குற்று எந்த அக்கிரமங்களையும் துணிந்து செய்கின்றார்கள்.

அவ்வகையாருள் பொருளுடைய ஒருவன் ஒரு தீச்செயலைப்புரிந்து விட்டுப் பொருளை அதிகமாகச் செலவிட்டு அதனை வெளிப்படாமல் மறைத்து விடுகிறான்; ஒருசமயம் அது வெளிப்படினும் பொருளை வாரியிறைத்து அதற்குரிய இராஜதண்டனையினின்றும் தப்பிக்கொள்ளுகிறான். கல்வியாளரும், அறிவாளிகளும் கூட அவன் பொருளுடையவனா யிருக்கிறானென்று பயந்தும், அவனால் அனுகூலம்பெற விரும்பியும் அவன் குற்றத்தை மறைப்பதற்கு இணங்குவதோடு அவனைப் பழிக்காமல் புகழ்தலும் செய்கிறார்கள். தேகதிடமுள்ளவனோ "நம்மோடெதிர்ப்பார் எவருமிலர்; எவரேனு மெதிர்த்தால் ஒரேகுத்தில் அவரை நாசப்படுத்தி விடலாம்" என அகங்கரித்து எத்தகைய பாவச் செயல்களையும் அச்சமின்றிச் செய்கிறான். அவ்வாறு செய்யும்போது அவன் போக்கிரியாயிருப்பதால் மற்றையர், அவனோடெதிர்க்கவோ, அதிகாரிகளிடம் அவன்மீது குற்றஞ் சாட்டவோ அஞ்சுகிறார்கள். பொருள் வன்மையும், உடல் வன்மையுமுடைய சில அறிஞர் தாங்கள்சுயமாக இவர்களை ஒடுக்க நினைந்தாலும் இராஜாங்க சட்டம் அதற்கிடங் கொடுப்பதில்லை; அக்கிரமக் காரர்களையும் இவர்கள் சுயமே தண்டிக்கப் புகுந்தால் இவர்கள் அக்குற்றத்திற்கு அதிகாரிகளால் தண்டனையடைய வேண்டியிருக்கிறது. அதிகாரிகள் மூலம் அவர்களை அடக்கலாமென்று நினைத்தாலோ, அவர்கள் தங்கள் பொருட்பலத்தாலும் தேகபலத்தாலும் அக்குற்றம் அதிகாரிகளுக்கு வெளிப்படாமலிருக்கும்படி செய்து விடுகிறார்கள். சாக்ஷிகளாலும், மற்றஹேதுக்களாலும் அவர்களுடைய குற்றங்களை ருசுப்படுத்துவது பெரிய பகீரதப் பிரயத்தனமாய் முடிகிறது.

இவ்வகைக் காரணங்களால் அந்த அக்கிரமக்காரர்கள், "நம்முடைய பலத்துக்குமேல் தெய்வபல மொன்றிருக்கிறது; அதற்கு முன் நம்முடைய வன்மை செல்லாது; இப்பொழு தில்லாவிட்டாலும் பின்னொரு சமயத்திலேனும் தெய்வ வல்லமையால் நாம் தண்டிக்கப்படுவோம்; உலகத்திலும் நமக்கிணையான வல்லமையுடையவர்களால் ஒருசமயம் தண்டிக்கப் படுதலும் கூடும்; நம்முடைய வன்மை எப்பொழுதும் நிலைத்ததன்று" என்று சிறிதும் சிந்திக்காமல் ஆணவத்தால் பீடிக்கப்பட்டு, ஆங்காங்கே அடுத்தடுத்து அநேகம் கொடுஞ்செயல்களைச் செய்துகொண்டே போகின்றார்கள். இவர்களால் பல பொதுஜனங்கள் ஹிம்சிக்கப் படுகிறார்கள்; ஏழைகள் கண்கலங்குகின்றனர்; அரிய சகோதரிகளாகிய பெண்மணிகள் கற்

பழிக்கப்படுகிறார்கள். காருண்ய கவர்ன்மெண்ட் ஒன்றிருக்கும் போது இத்தீமைகள் சிலரால் நடப்பது அறிஞர் மனத்தைப் புண் படுத்தக் கூடியதா யிருக்கின்றது. கொஞ்சக்காலத்திற்கு முன் கல்கத்தாவில் ஹிராலால் ஹக்ரவாலா என்னும் தனவந்த வியா பாரியொருவர் இராஜகுமாரி என்னும் ஒரு நேபாளஜாதிப் பெண் ணைப் படாதபாடு படுத்தியதும், அவரை, கட்காபகதூர்சிங் என் பவர் அடக்கியதுமான விஷயம் நம்போதினி 12 வது தொகுதி 11 வது பகுதி 513 வது பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. சமீப காலத்திலும் ஒரு கோர சம்பவம் நடந்திருக்கிறது.

பயேஸ் ஆலி என்னும் துன்மார்க்கன் ஒருவன் ஸில்ஹெட் டைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் இருந்து வந்தான். அவன் திமிர் ஏறிய தேகமுடையவனாதலால், அநேகம் பெண்மணிகளைக் கற் பழித்து துராக்கிருதம் செய்துவந்தான். அவன் கொடுமைக்கு ஆற் றாமல் சிலர் பக்கத்துக் கிராமங்களுக்குப் போய் வசித்து வந்தார் கள். அவன் இருந்து வந்த கிராமத்தார்கள் மிகவும் பயந்த சுபாவ முடையவர்களானதால், அவன் நீண்டகாலமாகத் தன் தீச்செயலைத் தீவிரமாக நடத்தி வந்தான். கடைசியாக அவன் ஒரு எளிய மனி தனின், மனைவியாகிய 16 வயதுள்ள பவித்ரா என்னும் பெண் ணைக் கற்பழிக்க விரும்பி, அவள் தன் நோக்கத்திற்கிசைந்தால் அநேகம் விலையுயர்ந்த வெகுமானங்களை அவளுக்குக் கொடுப்ப தாக ஒரு ஸ்திரீயிடம் சொல்லி, அச்சமாசாரத்தை அவளிடம் தெரி விக்கும்படி அப்பெண்ணை யனுப்பினான். அவ்வாறே அவள் பவித்ரா விடம் அதைத் தெரிவித்தாள். 'பவித்ரா' என்பது 'பரிசுத்தமுடைய வள்' என்னும் பொருளுடையதாதலால் அப்பெயரைக்கொண்ட அவள் அதற்கேற்ப மகாபரிசுத்தமுள்ள பதிவிரதையாகவே யிருந் தாள். ஆதலின், அவ்வெகுமதியை மிகவும் வெறுத்து அத்துஷ்ட னுடைய நோக்கத்திற்கிசையாதிருந்தனள். பயெஸ் ஆலி அதோடு விடாமல், ஒருநாள் அவள் தன் தாயோடு வசித்து வந்த வீட்டிற் குள் புகுந்து, அவன் நோக்கத்திற் கிணங்குமாறு அவளை வற்புறுத் தினான். அவள் திடசித்தத்துடன் அதனை மறுத்து விட்டாள். அதன்மேல் அவன் "நீங்கள் என் எண்ணத்திற்கிணங்காவிடில் நான் பலவந்தமாக உங்களைக் கற்பழிப்பேன்," என்று அவளையும், அவ ளுடைய தாயையும் பயமுறுத்திச் சென்றான். அவர்கள் அச்சமுற் றார்கள். அப்போது அவர்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலிருந்த 'ஸஷிமோஹன்' என்னும் 18 வயதுள்ள வாலிபனொருவன் அங்கு

நடந்ததையுணர்ந்து, அவர்களைக் காப்பாற்றுவதாக அவர்களுக்கு உறுதி மொழி கூறினன். அதன்மேல், பயெஸ் ஆலி, தான் கூறிய படியே ஒருநாள் சாயுங்காலம் அகங்காரத்துடன், அவ்வீட்டிற்குள் வலிய நுழைந்து, பவித்ரா என்பவளைக் கற்பழிக்க ஆரம்பித்தான். அப்போது ஸவிமோஹன் மூன்று தோழர்களுடன் அங்கு வந்து, அத்துன்மார்க்கனைத் தடுத்தான். அவன் அடங்கவில்லை. அதனால் ஸவிமோஹன் அவனைக் கத்தியால் குத்தினன். அதனால் அத்தூர்த்தன் இறந்தான். ஸவிமோஹன்மீது அக்கொலைக்குற்றம் ஏற்பட்டுவிட்டது. அக்கேஸின் விசாரணை முடிவு காலத்தில் அக்குற்றத்தைப்பற்றி அபிப்பிராயங் கூறுதற்கு ஐந்து ஹிந்துக்களும், இரண்டு முஸல்மான்களும் ஜூரர்களாக நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் எல்லோரும் ஒரே மனதாய், "ஸவிமோஹன் குற்றவாளி அல்லன்" என்று கூறினர்கள். அதன்மேல் நியாயாதிபதி அவனை விடுதலைசெய்து விட்டார். பெருந்தன்மையும் தைரியமும் பொருந்திய இவ்வாலிபன் யாதொரு தண்டனையின்றி நியாயப்படி விடுதலையடைந்ததைப்பற்றி நாம் சந்தோஷிக்கிறேம்.

இங்கு உதாரணமாக எடுத்துக் காட்டிய இவ்விருவருள் முன்னவன் பொருள் வலியால் அக்கிரமஞ்செய்தவன்; பின்னவன் உடல் வலியால் தீமை புரிந்தவன். இவர்கள் தங்களுக்குமிஞ்சினவரெவருமில்லை என்று அகங்கரித்து அநீதிச் செயல்புரிந்து வந்தும் இவர்களைப் போன்ற வேறுவல்லமையுடையவர்களால் ஒடுக்கப்பட்டார்கள். இவர்களை ஒடுக்கியவர்களுக்குத் தெய்வந் துணைபுரிந்தது. இத்துஷ்டர்கள் மனிதரால் அடக்கப்படாவிடினும், இராஜங்கத்தாராலேனும் தண்டிக்கப்படுவார்கள். ஒருசமயம் அதற்குந் தவறினும் தெய்வ வல்லமையால் நிச்சயமாகத் தண்டிக்கப்படுவார்கள். ஆதலின், அக்கிரமக்காரர்கள் அதனை விட்டால் மாத்திரமே சுகம் பெறுவார்கள்.

இக்காலத்தில் பலர், அவிவேகத்தால் தெய்வவல்லமையொன்று நம்மைப் பாதாளத்தில் அழுத்த இருந்து கொண்டிருக்கிறதென்பதை அடியோடு மறந்து தங்கள் வல்லமையே சிறந்ததெனக்கருதி இவ்வகையான எத்தனையோ எண்ணத்தொலையாத கொடுஞ் செயல்களைச் செய்து வருவதை எவரும் எங்கும் காணலாம். இத்தீச்செயல்கள் ஒழிக்கப்படவேண்டும். பின்னே இத்தகையினர்க்குத் தெய்வ தண்டனை யேற்படுவது நிச்சயமாயிருந்தாலும் இக்கொடுஞ்செயல்கள் நடைபெறுதிருப்பதற்கான முயற்சிகளை, காருண்ய கவர்ன்மெண்டாரும், அறிஞராகிய பெரியாரும் அவசியம் எடுத்துக்கொள்ளவேண்டும். அங்ஙனம் மனிதவல்லமைமையைக்கொண்டு நீதியை நிலைநிறுத்தினல், தெய்வவல்லமையால் எல்லோருக்கும் நன்மையே உண்டாகும்.

ஓம் தத் ஸத்.




## பாபு சுரேந்திர நாத் பனர்ஜி.

**தா**ய் குழந்தைக்குப் பாலூட்டுகிறாள்; பேச்சுப்பழக்க முண்டாக்குகிறாள். நாம் எவ்வளவு வயதானவராயிருந்தாலும் நமது தாய்க்குக் குழந்தை யாகவே இருக்கிறோம்; இறந்த அவளை நினைதது ஏங்குகிறோம். நம்முடைய ஆயுள் முடியும் வரையில் நாம் அவளை மறப்பதில்லை. அதுபோல நமக்கு ராஜீயப்பா லூட்டி, நாம் உரிமை வார்த்தைகளைப் பெருமையுடன் பேச வழி காட்டி, கடந்த நாட்களில் தொடர்ந்த தேசத் தொண்டியற்றி அடர்ந்த தேசாபிமானத்தை எங்கும் பரப்பிய தேசமகாதலைவர்கள் பலர். அத்தலை வர்களுள் ஒவ்வொரு மனிதராலும் ஏற்றத்தாழ்வின்றி ஏகோபிதமாகப் போற் றப்படுபவர் சிலர். அன்னாருள் பாபு சுரேந்திர நாத் பனர்ஜியே முக்கியமான வர். வங்காளத்தின் தலைநகரான கல்கத்தாவில் 1848-ம் ஆண்டு குலின பிராமண குலத்தில் அறிவே உருவெடுத்ததென்ன இப்பெரியாருடைய

### தோற்றம்

ஏற்பட்டது. இவருடைய தந்தையார் திருப்பெயர் பாபு தர்க்க சரண பனர்ஜி. அப்பெரியாருடைய ஐந்து குமாரர்களில் இவர் இரண்டாமவர். விவேகமுள்ள குழந்தைகளுடன் கூடிய அவ்வீடு ஓர் வித்யாமன்றமாகவே விளங்கிற்று. சிறு பிராயத்தில் வித்யாரம்பம் செய்விககப்பட்டுப் புராதனகால முறைப்படி பாடசாலைக்குச் சென்று வந்தார் பாபு; ஏழாம் பிராயததில் இந் திய ஐரோப்பியர்களுக்கென்று நடந்து வரும் டோலடன் கலாசாலையிற் சேர்ந்து கல்வி பயின்றார். இவருடைய பிற்கால 'வல்ல சொறபொழிவாள நிலை' க்கு இக்கலாசாலையே ஆதாரமெனலாம். பாபு 1863-ம் ஆண்டில் லத் தீன்பாஷையை உபபாடமாககொண்டு பிரவேசப் பரீக்ஷையில் முதலாகத் தேர்ந்தார். இதனால் இவருக்கு அரசாங்க அரை உபகாரச் சம்பளம் கிடைத் தது. பிறகு சிறு கலா குமாரப்பரீக்ஷையிலும் (F. A) இவர் முதல் ஸ்தானத்தை வகித்தது கண்டு ராஜாங்கத்தார் இவருக்கு முழு உபகாரச் சம்பளமும் கொடுத்துதவினார்கள். ஆனால் கலாகுமாரப்பரீக்ஷையில் இவர் நோய் வாய்ப் பட்டமையால் முதலாகததேற இயலவில்லை. ஆனாலும் 1868-ல் இவா இரண் டாம் வகுப்பில் பி. ஏ. பட்டம் பெற்றார். இவர் கல்வி பெறவேண்டுமென்ற அவாவால் பெற்றோரின் விருப்பத்திற்கு மாறாக 1868-ல் ஐ. ஸி. எஸ் பரீ க்ஷைக்கு வாசிக்க,

### அலைகடல் யாத்திரை

செய்து ஆங்கில நாட்டை அணுகினார். லண்டன் சர்வ கலாசாலையிற் சேர்ந்து ஹென்றி மோர்லி, கோல்ட் ஸ்டக்கர் முதலான பெரிய அறிவாளிகளை

யமெத்து, வடமொழியிலும், ஆங்கிலத்திலும் ஆராய்ச்சிகள் செய்து காலங் கழித்து வந்தார். ராமேஷ் சந்திரடட், பிகாரிலால் குப்தா முதலானவர்களும் இவரும் 1868-ல் ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் தேர்ந்தார்கள். இவரை அரசாங் கத்தார் சைல்கெத்துக்கு உப நியாயாதிபதியாக நியமித்தார்கள். இத்தருணத் தில் இவருடைய தந்தையின் மரணம் நேர்ந்தது. 1871-ல் பாபு இந்தியா வுக்குத் திரும்பிவந்தார்; இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் உத்தியோக மேற்றூர். அபிமானக் குறைவால் இவர் பல ராஜீய குற்றங்களுக்கு ஆளாயி னர். ஓர் தனிக்கமிட்டியார் இவருடைய விஷயங்களை ரகசியமாகக் கல்கத் தாவிற்கு வெளியிலிருந்த ஊர்களில் ஆராய்ந்து ஓர் முடிவுக்கு வந்தனர். அது இவருடைய உத்யோகத்தைப் பாதித்து இவர், வேலையினின்றும் விலகக் கூடிய நிலையை உண்டாக்கிற்று. இவருக்கு மாதம் 50-ரூபாய் உபகாரச்சம் பளம் கொடுக்க அரசாங்கத்தார் எண்ணினர். தம்மீது வீண்பழி சுமத்தி விப ரீதம் விளைவித்த பலரின் அடாத செய்கையைப் பெரியார்பால் அறிவிப்பான் கருதி அன்பர் அலைகடல் கடந்து ஆங்கில நாடுசென்றூர். அங்கு சென்றும் அநீதியே வழங்கியது கண்டு திரும்பினூர். இது அவருடைய வாழ்வின் ஆரம் பத்தில் ஏற்பட்ட சிறுகஷ்டம்.

## துன்பத்திற்குப் பின் இன்பம்

பிரபஞ்சத்தில் பிரத்யக்ஷம். இவருக்கு உத்தியோகமில்லாது போனது கண்ட பாரத அன்னையின் அகம் நனி குளிர்ந்தது. பாபு அவ்வுத்தியோகத்தில் நின்றிருப்பாரேல் அவருடைய தேச சேவையை ஆர்யவர்த்தம் பெற்றிருக்கு மென்று நாம் எண்ணுவதற்கில்லை. அங்ஙனம் அவர் உத்தியோகம் நீங்கிய தற்குக் காரணம் அன்னைபுரிந்த மறக்கருணையும், யாமியற்றிய தவப்பயனுமே யன்றி வேறில்லை. அவரால் ராஜீயம் புத்துயிர் பெற்றது; புனருத்தாரணம் செய்யப்பட்டது. அவருடைய திருநாமமும் திருஉருவப்படமும் காங்கிஸால யத்தில் இன்றும் என்றும் திகழ இதுவே வாய்த்த ஓர் நல்ல சந்தர்ப்பம். ஸ்ரீராமசந்திரன் துஷ்ட நிக்ரஹஞ் செய்ய எவ்விதம் வனமேகும் துக்க சம்ப வம் நேர்ந்ததோ, அதேபோல தேசம் பின்னடைதலை ஒழிக்க இவர் முன் வர, வேலை யிழக்கும் சமயம் வாய்த்தது. பின்பு 1876-ல் பனர்ஜி கல்கத்தா மெட்ராபாலிடன் கலாசாலையில்

## அறிவிற்சிறந்த ஆசிரியர்

ஆனூர். 1881-ல் அவர் பிரீ சர்ச் கலாசாலை (Free church college) யிலும் ஆங்கில சொற்பொழிவாளராக அமர்ந்தார். மனதில் அவர் அனுபவத்தால் சுதேசக் கலாசாலையின் அவசியத்தை அறிந்தவராதலின் 1872-ல் அவர் சொந்தமாக ஓர் தனிக் கலாசாலையை நிறுவினூர். அக்கலாசாலை வெகு சீக் கிரத்தில் இந்தியாவிலேயே அதற்கு நிகரான கலாசாலை இல்லையெனக் கூறும் வண்ணம் பிரபல மடைந்தது. அதற்கு லார்ட்ரிப்பன் கலாசாலை என்று அவர் பெயரிட்டார். அக்கல்வி நிலையத்தில் இந்து போதகாசிரியர்களே பெரிதும் நியமிக்கப்பட்டிருந்தனர். தேசமகா ஸ்தாபனத்திற்கு அரசரென

விளங்கிய திலகர் பர்கூஸன் கலாசாலையில் உபந்நியாசகராகவும், அரபிந்த கோஷ் பரோடா காலேஜ் போதகாசிரியராகவும் இருந்தவர்களன்றோ! ஆசிரிய நிலையிலிருந்தவர்களே அன்னையின் பணிக்கு ஏற்றவர்போலும். பாபுவும் போதகாசிரியத்தொழிலை அடுத்தது காண்மின்!

(தொடரும்.) ஸ்ரீ. லக்ஷ்மீ காந்தன்.

---

## தென் நாட்டில் தேசீயம்.

புண்யபுரி நகரமண்டபத்திற்குச் சமீபத்தில் ஒரு மாலையில் ஏட்டேப்பிரதாபர், சிலரைநோக்கி "அன்பர்களே! தென் நன்னாடு பொன் நாடு! அன்பெனுஞ் சமயங்களை இன்புற வளர்த்த இதபூமி. வைணவமும் சைவமும் வற்றாது ஏற்றமு மெழிலும் பெற்ற இடம். அலகிலா விளையாட்டுடைய அண்ணல் அடிக்கொருமுறை நொடிக்கொருபொழுது ஆனந்தத்தாண்டவம் புரிந்து ஆஸ்திகர்களை அளித்ததும் நாஸ்திகர்களை அழித்ததும் இங்கேதான். அறுபத்துமூவரென்ன! சைவத்திருமுறைகளென்ன! பதின்மரென்ன! பாங்குடனோங்கும் திவ்யப்பிரபந்தமென்ன! தமிழ் மண மென்ன! தமிழ்நாட்டு அரசர் பெரியார் சரிதப் பெருமை யென்ன! இவற்றுள் எதைக் கூறினும் எம்நாடு சிறந்ததென்பது நன்கு விளங்கும்." என்று கூறிக்கொண்டு வருவதைக்கேட்ட காந்திநாதன் சரேலென எதிர்த்து,

"நேயர்களே! மேற்கூறியவற்றால் நம்நாடு சிறந்ததென்பது உண்மையே. ஆனால் நம் நாட்டின் தற்காலநிலை மிகப் பரிதபிக்கக்கூடியதா யிருக்கிறது. வடநாட்டில் வகுப்புவாதம் இல்லை. மகமதிய இந்து மத வேறுபாட்டையன்றி வேறு பாட்டையில்லை. ஆனால் தென்நாட்டிலோ வகுப்புவாதமூட்டையும், தேசநலத்திற்கே ஓர் ஓட்டையும், ஏற்பட்டுத் தமிழ்த்தாய்க்கொரு வாட்டமும் உண்டாயிருக்கிறது. நாம் அன்னியரால் பதராகத் தூற்றப்பட்டிருக்கின்றோம். காங்கிரஸ் சேவை என்ற பெருமிதச் சொல்லேபோய்-மறைந்து, மிதக் கட்சி, அமிதவாதக் கட்சி, மந்திரிக் கட்சி, பார்ப்பனக் கட்சி, பார்ப்பனரல்லாத கட்சி எனக் கக்ஷிகள் பெருகிப் பட்சிகளெனப் பறக்கின்றோம். இவை ஒவ்வொன்றிலும் உள்ளவர்கள் மந்திரத்தாலும், தந்திரத்தாலும், சுதந்திரத்தையடையக் கபட எண்ணத்துடன் விகட விநோதலீலைகளைப் புரிகின்றனர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு மிகையாயிற்று. ஜெயித்த கக்ஷியில் சேரும் தேசப்பிரசன்னர்கள் சன்னத்தமாகிவிட்டனர். உலகுய்யத் தோன்றியவர் ஐந்தாண்டுகட்கு முன்னர் உணர்த்திய கதரை, ஒரு கக்ஷியார் 'கதர் நன்மையைப் பயக்கலாம்' என்று இப்பொழுதுதான் உணர ஆரம்பித்திருக்கின்றனர். தலைமைப்பட்டம் வகிக்கத் தம்பட்ட மடித்துக்கொண்டு தாறுமாறாகப் பலர் தலைப்பட்டுவிட்டனர். வெளியில் கதரும், உள்ளே புக்மல்லும் கட்டும் தேசபாஷா அபிமானிகள் எத்தனையோபேர். பத்திரிகைகளும் பரிதாபநிலையில் பாரிலுலவ ஆரம்பித்துவிட்டன. தேசம் விளம்பர சபையாகவும், வியாபாரக் கூட்டுறவுச் சங்கமாகவுமாறிவிட்டது

தேரை இழுக்க ஆள்சேர்ப்பதுபோல் தேசநன்மையின்கதி ஆகி நாசமாயிற்று. தேர்தலுக்கு முன்பு மேடையில் முட்டுக்கட்டை போட்டவரெல்லாம் அசட்டை செய்கிறார்கள். பத்திரிகைகள் மறந்தாங்கி மகாநாடு, புத்தூர் மகா நாடு என்று கூட்டங்கூடிக் குப்பைகூட்டிக் குவித்து வைக்கின்ற செய்தியைப் பரப்ப வாரம்பித்துவிட்டன. மகாத்மாவைப் போற்றுவிடில் மாட்சியும் மீட்சியும் இல்லையென்று பல கூட்டத்தார் வெகு சமீபத்திலுணர்ந்து கொண்டு—அப்பெரியாரது உபதேசங்களைச் செய்கையி லற்றாராலும், வாய்ச்சொல்லில் வீரராகி அவரை வாழ்த்த வாரம்பித்துவிட்டனர். காங்கிரஸுக்கு உள்ள செல்வாக்கால் அதனைச் சார்ந்துவிளம்பர வினயப் பிரதானியாக வேஷம்போட ஆரம்பிக்கின்றனர் பலர். அப்பப்பா ! அநேகர், ஆதித்திராவிடர் முதல் ஆண்ஜாதி பெண்ஜாதிவரையில் உள்ள ஜாதிச் சண்டை கூச்சல் போடத்தொடங்கிப் பூசையில் கரடியை விடுவதை யொப்ப நடுவில் புகுந்து பல கிளர்ச்சிகளை உண்டாக்குகின்றனர். அவை நாட்டியமாடுகின்றன. நமது தென்னாட்டின் யோக்யதை—ஸ்திதி இப்படியிருக்க "வந்துவிட்டது சுராஜ்யம். புறப்பட்டு வண்டியேறிவிட்டது. வருகின்றது வடக்கிலிருந்து" என்று முடக்குகள் தோறும் மடக்கி மடக்கிப் பேசிக்கொண்டு நாம், உண்பதும் உறங்குவதுமே இன்பம்—நமது கடமை—அதுதான் மோட்சம் என்று எண்ணிக்கொண்டிருக்கிறோம். சாத்விகம் அளவுகடந்து போனமையால் மழுங்கலானோம். தேசத்தலைவர் சொல்லெல்லாம் செவிடன் காதி லூதிய சங்கநாதமாயிற்று. நீர் பழய பாடம் படித்தீரே அது மங்கம்மாள் காலத்திற்கு முந்தின சங்கதி. விரித்துப் பார்த்தாலன்றோ விளங்கும் நம் தென்னாட்டு வண்டவாளம்.

ஆதலின்—நமது கடமையை—தொண்டை நாம் நமது மனச்சாட்சிக்கு விரோதமன்னியில் தெய்வசம்மதமாக முதலிற் றொடங்கவேண்டும். சுயநலத்தையும் புகழையும் விரும்பி எதையும் ஏற்கலாகாது. தலைக்குத் தலை நாட்டாண்மை ஒழியவேண்டும். தேசநன்மையான விஷயங்களில் நமக்கு நம்பிக்கை மட்டுமிருப்பது பயனற்றது. அதன்படி நாம் நடத்தலே பிரதானம். அன்றுதான் நமக்குண்டு மானம். இல்லையேல் ஈனந்தான். கட்சியென்ற சொல்லையே தேசீய அகராதியினின்றும் எடுத்துவிடவேண்டும். அது குரோத, விரோத வெள்ளத்தைப் பெருக்கும். அறமே அகலாகவும், அன்பே நெய்யாகவும், ஆர்வமே திரியாகவும், அருளே தீயாகவும் அமைய, நாட்டிலே இருள் நீங்கும்படி நாம் நன்மை விளக்கேற்றி வைக்கவேண்டும். வருகின்ற டிசம்பரில் வருஷாந்தர அகில இந்திய காங்கிரஸ் சென்னையில் கூடப்போகின்றது. மகாத்மா காந்தியடிகளும் தென்னாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்து கொண்டிருக்கிறார். அவர் சொற்றுறந்தால் வாசகமில்லை. அவருடைய அடிச்சுவடுகளை நாம் விடாது பற்றவேண்டும். இனியாவது ஒருவாறு நாம் திருந்தினால்தான் உண்டு நன்மை ! இல்லையேல் மூண்டது புன்மை."

என்று சொன்மாரி பொழிந்தான். இவற்றைக் கேட்டு ஏட்டுப்பிரதாபர் 'ஐய ! தேசக்ஷேமம் என்ற சூட்சுமம் எதிலிருக்கிறது ?' என்று காந்திநாத

னிடம் கேட்டார்.] காந்திநாதன். "மூன்றெழுத்துப் பெயரோன்—காந்தி, அதைக் குறித்துச் சொன்ன மூன்றெழுத்து—கதர், மூலமந்திர மிதுதான்" என்று ஒரு அச்சிட்ட சிறு துண்டுக் காகிதத்தை ஏட்டுப் பிரதாபரிடங் கொடுத்துவிட்டு ஏகினன் வந்தவழி. அந்தக் கடிதத்தைப் பார்க்கும்பொழுது அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:

**காந்தி தரிசனம்.**

காந்தி யருளிய கதர்! ஏழை படுந்துயர் போக்கும்! எண்ணிலா இன்பத்தை இன்றே நமக்காகும்! துன்பத்தால் விளைந்திடும் துயரினைப் போக்கும். அன்பைப் பெருக்கி இங்கு அருள் வெள்ளமாகும். அதனைத் தரிப்பதே அறிவென்று அறிவீர்; அளவிலா ஆனந்தம் அன்பரே பெறுவீர்! (சரோஜனிதேவி)

தேஸ தாஸன்.





## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(63-ம் பக்கத் தொடர்ச்சி.)

(கர்மம் மோக்ஷத்திற்கு சாக்ஷாத் சாதனமாகாதென்பது நிரூபிக்கப்படுகின்றது)

'மோக்ஷமானது கர்மத்தாலும் சித்திக்காது; சந்தானத்தாலும் சித்திக்காது' என்று சுருதியானது கர்மம் மோக்ஷத்திற்கு சாக்ஷாத் சாதனமாகாதென்று நிஷேதிக்கின்றது. சாக்ஷாத்காரணமாகாது என்றதனால் பரம்பரா சாதனமாமென்பது விளங்குகின்றது.

(ஆயின் மோக்ஷத்திற்கு ஏதுவாயிருப்ப தெதுவெனின்:) ஜீவாத்மா யார்? பரமாத்மா யார்? என்று விசாரித்தலாகிய ஜீவாத்ம பரமாத்ம விசாரணையின் மூலமாக ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்றுணரும் ஜீவப் பிரம்ம ஐக்கிய ஞானமே மோக்ஷ ஏதுவாம். இதைத்தவிர, ஸ்நானம், கீர்த்தனம், ஜெபம், உபவாசம், யாகம், மந்திரதந்திரங்கள் முதலிய வேறொன்றாலும் முத்தி சித்திக்காது. 'மோக்ஷமானது ஞானத்தாலேயே சித்திக்கும்' என்று கூறும் வேதமே இதற்குப் பிரமாணமாம். ஆகவே, ஆத்மானாத்ம விவேக

முடையவனாய், விரக்தியடைந்து, பிரம்மமொன்றே நித்திய மென்றறிந்து அத்தகைய பிரம்மபாவத்தையடைய விரும்புவோனுக்கு அநித்திய பலனைத் தரும் கர்மத்தில் ஆசக்தியுண்டாகாது. அநித்தியமாகிய சுவர்க்க முதலான வற்றை யடைதற் பொருட்டுச் சாதனமாக விதிக்கப்பட்ட *நித்திய நைமித்தி கங்களாகிய எல்லாக்கர்மமும் மோக்ஷசாதனமன்று. ஆதலின் பிரம்ம பாவத்தையடைய விரும்பும் முமுக்ஷுவால் விடத்தக்கது.

## சமுச்சயவாத கண்டனம்.

(சமுச்சயவாதமாவது—கர்மம் ஞானம் என்னும் இரண்டும் மோக்ஷ சாதனமாமெனல். அது சரியல்லவென்று ஈண்டுக் கண்டிக்கப்படுகின்றது.)

**சங்கை:**—முமுக்ஷுவுக்கும் ஞான கர்மங்களிரண்டும் சாதனங்களேயாம். எப்படி இரண்டு கைகளும் சேர்ந்து ஒரு காரியத்தைச் செய்துமுடிக் கின்றனவோ, அப்படியே கர்ம ஞானங்களிரண்டும் மோக்ஷவிருப்ப முள்ளவனுக்கு மோக்ஷமாகிய காரியத்தைச் சாதிக்கக் கூடியவைகளே யாம். ஓர் விளக்கிலுள்ள வர்த்தியைச் சரியாகச் செய்யும் காரியத்தால் அவ்விளக்கானது மிகவும் பிரகாசமாய் விளங்குவதுபோல, மனிதனுக்கு ஞானமானது சாஸ்திரங்களில் சொல்லப்படிருக்கும் கர்மங்களைச் செய்வ தனல் பிரகாசமடைகின்றது. இதனல் கர்மாபேக்ஷையுடைய ஞான மாயினும் அல்லது கர்மஞானங்கள் சேர்ந்து இரண்டுமாயினும் மோக்ஷத் திற்குச் சாதனமாகும் என்று வேதமுணர்ந்த பெரியோர் கூறுகின்றனர். ஆதலால் முமுக்ஷுவானவன் சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மங் களை விடல் வேண்டும்-செய்யலாகாது-என்பது எப்படிப் பொருந்தும்? எனின், இவ்வித ஆக்ஷேபம் மூடர்களால் செய்யப்படவேண்டுமே யன் றிப் பண்டிதர்களால் செய்யப்படக்கூடாது. ஏனெனின், கர்மத்திற்குப் பலன் வேறு; ஞானத்திற்குப் பலன் வேறு. இரண்டிலும் அதிகாரி களுக்கும் சாதனங்களுக்கும் பேதமுண்டு. கோரிக்கையுள்ளவன் கர்மத் திற்கு அதிகாரி; கோரிக்கையில்லாதவன் ஞானத்திற் கதிகாரி. கர்மம் செய்வோனுக்கு மனைவி யாகதிரவியங்கள் முதலியவை சாதனமாம்; ஞானத்தைக் கோரியவனுக்கோ குருவைத்தவிர வேறு சாதனம் தேவை யில்லை. கர்மத்தினல் அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக அகங்காரம் விருத்தியாகின்றது. ஞானத்தால் பிரதிநிமிஷமும் அகங்காரத்தின் நாசம் நேரிடுகின்றது. கர்மத்தை நிரூபிக்கும் சாஸ்திரம் பிரவிருத் தியை யுண்டாக்குவது; ஞானத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரம் நிவிர்த் தியை யுண்டாக்குவது; இவை முதலான ஒன்றுக்கொன்று விரோதமான லக்ஷணங்கள் கர்ம ஞானங்களின் சாதனங்களிலும் அதிகாரிகளிடத்து மிருக்கின்றன. ஆகலின் கர்ம ஞானங்களிரண்டின் சாதனங்களுக்கும்

* எதைச் செய்யாவிட்டால் தோஷமுண்டாகுமோ அது நித்தியம்-சந்தியாவந்தனம் முதலியவை. நிமித்தத்தால் (காரணத்தால்) செய்யப்படு வது நைமித்திகம்-விநாயக பூஜை முதலியன.

அவ்வாறே இரண்டின் அதிகாரிகளுக்கும் அன்னியோன்னியாபேக்ஷை இல்லை. ஞானம் மேல் நிலையையும் கர்மம் கீழ் நிலையையும் அடைவிக்கும். அங்ஙனமாக எப்படி அன்னியோன்னியாபேக்ஷையிருக்கும். சேர்க்கையாயினும் எப்படிச் சம்பவிக்கும். நெருப்பிற்கும் துரும்பிற்கும், ஒளிக்கும் இருளுக்கும் எப்படிச் சேர்க்கை சம்பவியாதோ அப்படியே ஞானத்திற்கும் கர்மத்திற்கும் சேர்க்கையுண்டாகாது.

### கர்மம் ஞானத்திற்கு உதவியாகாது.

கர்மம் ஞானத்திற்கு உதவியாவதுமில்லை. (ஒளியானது தோன்றத் தொடங்கின மாத்திரத்தில் இருளானது நாசமடைவதுபோல) ஞானத்தின் ஆரம்ப மாத்திரத்தால் கர்மம் பிரகாசமடைவதில்லை. அப்படித் தனக்கு நாசத்தை (அபாவத்தை) யுண்டாக்கும் ஞானத்திற்குக் கர்மம் எங்ஙனம் உதவிசெய்வதாகும். கோடிக்கணக்கான விறகுச் சுமைகளால் எரிக்கப்பட்ட அக்கினியாயினும் சூரியனுக்கு உதவிசெய்யத் தகுந்ததாகாததுபோல ஆயிரங்கோடி கர்மங்களும் ஞானத்திற்கு உபகாரம் செய்வதற்குத் தகுதியுள்ளவையாகா. வேறென்னாகும்? எனின், தாமே நசித்துப்போகும்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், சித்தூர்.





## யோகம்.

(66-ம் பக்கத் தொடர்ச்சி.)

அக்கினிமண்டலம் நாபியின் கீழுள்ளது. அது மனிதர்களுக்கு முக்கோண வடிவமாயிருக்கும். பட்சிகளுக்கு வட்டவடிவாயிருக்கும். மிருகங்களுக்கு நாற்கோணமா யிருக்கும். உருக்கின சொர்ணத்தைப்போல ஒளி வீசிக்கொண்டிருக்கும். மூலபந்தனத்தால் அபானன் பிராணனோடு கலந்து மேற்செல்லும். அப்போது நாதசம்பந்தமும் உண்டாய் சுழுமுனை வழியிற் சென்று பிரமரந்திரத்தை யடையும். அதுவே யோகசித்தியாம். யோகசித்தியுண்டானால் அந்த யோகியால் அடையப்படாதது யாதொன்றுமில்லை. இதனால் மூலபந்தமுத்திரை மஹா முக்கியமானது. இதை யோகிகள் விடாமல் அனுஷ்டிக்கவேண்டியது.

ஜாலந்திரம் கண்ட துவாரத்தைச் சுருக்கவேண்டும். இருதய ஸ்தானத்துக்கு நாலு அங்குலம் மட்டும் முகவாய்க்கட்டையைத் தாழ்த்தி ஸ்திரமாயிருக்கும்படி செய்யவேண்டும். இதனால் கழுத்தைச் சுருக்கிக் குனிந்து

முகவாய்க்கட்டையை இதயஸ்தானத்துக்கு நாலு அங்குல மிடை வெளி யிருக்கும்படி நிறுத்துதல் ஜாலந்திரமாம் என்று புலப்படுகின்றது. இந்த ஜாலந்திரபந்தத்தால் கபாலகுகரத்திலுள்ள அமிர்தம் அக்கினியில் விழாது. பிராணவாயுவும் வேறு நாடியிற் பிரவேசியாது. இடைகலை பிங்கலை நாடிகளின் செயலறும். இந்தக் கண்டஸ்தானத்தில்தான் விசுத்தி என்னும் மத்திம சக்கர மிருக்கின்றது. இதனால் பதினாறு ஆதாரங்களும் பந்திக்கப்படுகின்றன.

அங்குஷ்டம் முதல் பதினாறு ஸ்தானங்களிலும் வாயுதாரணை செய்கிறவனே யோகிகளிற் சிறந்தவனென்று நூல்கள் கூறுகின்றன.

பதினாறு ஸ்தானங்களாவன:—அங்குஷ்டம், பாடு (கால் முளிகள்), முழந்தாள், தொடை, பீஜத்தின் அடி, இலிங்கஸ்தானம், நாபி, இதயம், குரல்வளை, கழுத்து, நாக்கு, மூக்கு, புருவநடு, நெற்றி, சிரசு, பிரமரந்திரம் என்பவைகளாம். உட்டியானபந்தத்தால் வாயு இடைகலை பிங்கலை நாடிவிட்டுச் சுழுமுனை வழியாகச் செல்லும். சுழுமுனைநாடியின் வழியாகச்சென்று பிரமரந்திரத்தில் சேர்ந்து நிற்பதே வாயுலயமாம். மூலபந்தம், உட்டியானபந்தம், ஜாலந்திரம் ஆகிய இந்தப் பந்தங்களினால் நரை, திரை, மூப்பு, மரணம் முதலியவை ஒழியுமென்று முன்னரே கூறப்பட்டமையால் யோகிகள் இவற்றை அவசியம் அனுஷ்டிக்கவேண்டும். இவைகளை அனுஷ்டித்ததனாலேயே சித்தர்களும் மஹரிஷிகளும் மேன்மைபெற்றார்கள்.

புருவத்தின் இடதுபுறத்தில் சந்திரனிருக்கின்றது. அதினின்றும் அமிர்தம் பெருகி ஒழுகும். அந்த அமிர்தத்தை நாபியில் இருக்கிற சூரியன் குடித்துவிடுகின்றது. அந்த ஸ்தானத்தில் சூரியன் அக்கினி வடிவமாயிருக்கின்றது. அது அமிர்தம் முழுவதையும் குடித்துவிடுவதால் நரைதிரை மூப்பு மரணங்களுண்டாகின்றன. அமுதம் சந்திரனிடமிருந்து சூரியனிடம் செல்லாமல் யோகி தானே அதை யருந்தவேண்டும். அதற்காக விபரீதகரணியை அனுஷ்டிக்கவேண்டும். விபரீதமுறை தவறுதல் என்பது பொருள். மேலேயிருக்கும் சந்திரனைக் கீழும் கீழிருக்கும் சூரியனை மேலும் இருக்கும்படி மாற்றுதலாகிய கரணம் விபரீத கரணியாம். இதனால் சந்திராமிர்தம் அக்கினியில் வீழ்ந்து சரியாமல் சரீரத்தில் நாடிகளின் வழியாகப் பரவும். அப்போது சரீரம் அழியாத தன்மையை அடையும். இதனை அப்பியாசிப்பது சற்றுக் கடினமானதே. யோகத்தை முறையாக அப்பியாசித்துவரும் சாதர்களுக்குக் கைகூடும்.

அனுஷ்டிக்கும் முறையாவது, சிரசைப் பூமியில் வைத்து இருகைகளாலும் இடுப்பைப்பற்றிக்கொண்டு, பிடரி தலையின்புறம் புஜங்களாலும் பூமியை அழுத்திக்கொண்டு இரண்டு கால்களையும் மேலே தூக்கி நீட்டிக்கொண்டிருத்தலாம். இவ்வாறு ஒரு கணப்போது இருக்கவேண்டும். நாளுக்கு நாள் ஒரு கணம் அதிகப் படுத்திக்கொண்டே போகவேண்டும். இவ்வாறு கொஞ்சங் கொஞ்சமாக அப்பியாசித்து ஒருநாளுக்கு ஒரு ஜாமநேரம் அப்பியாசிக்கக்கூடியவன் மரணத்தை நிச்சயமாகவே ஜயிப்பான். இவனுக்கு மரண

மில்லை. தனக்கிஷ்டமானபோது சரீரத்தை விடுவான். ததீசி முதலியோர் தமதிஷ்டம் போலச் சரீரத்தை விட்டது புராண பிரசித்தம். சரபங்கரும் யோகவலிமையால் கபாலத்தைப் பிளந்துகொண்டு சரீரத்தை விட்டுப் பிரம பதத்தை அடைந்தாரென்று இராமாயணம் கூறுகின்றது. அவர்களுக்கு மரண துன்பமேயில்லை. இதனால் இதை அனுஷ்டித்த யோகிக்குப் பிராரப்த கர்ம பந்தமில்லை யென்பது விளங்கும். இந்தச் சரீரத்துக்குக் காரணமானதும், சரீரமுள்ளவரைக்கும் அந்தச் சரீரத்தை விட்டு நீங்காமலிருந்து பலபல வியாதிகளையும், இன்ப துன்பங்களையும், அந்தத்தில் மரணதுன்பத்தையும் கொடுத்து ஒழிவதுமாகிய பெரும் பந்தமான பிராரப்த கர்மத்தையும் யோகி வெல்லக்கூடுமென்பது நன்கு புலப்படும். இதை அப்பியாசிக்கிறவனுக்கு ஜாடராக்கினி விருத்தியாகும். ஆதலால் அவன் நிரம்ப ஆகாரம் கொண்டால் தான் நல்லது. இல்லாதபட்சத்தில் ஜாடராக்கினி அதிகரித்துச் சரீரத்தைக் கெடுத்துவிடும். ஆகையால் புஷ்டியான ஆகாரம் புசிக்கவேண்டும். இவனது மேலண்ணத்திலிருந்து சந்திராமிர்தத்தைப் பானம் பண்ணுதலால் இவனுக்கு மரணமில்லையென்று நூல்கள் கூறுகின்றன. இவன், எத்தனை காலமானாலும் ஜீவனோடிருக்கலாம்.

இது சித்தியானபின் வஜ்ரோலி முத்திரை அப்பியாசிக்கத் தக்கதாம். இந்த முத்திரை மன அடக்கமும் பிராணாயாம சித்தியும் உடையவனுக்கே சித்தியாம். ஸ்திரீகளுக்கு முரியது. பிராணாயாமாதியோக சித்தி ஸ்திரீகளும் அப்பியாசிக்கலாமென்று நூல்கள் கூறுதலால் என்க. இது விந்து நழுவி விழாதபடி காத்தலாம். அப்படியே ஸ்திரீகளுக்கும் ஒழிந்து போகாதபடி காத்தலாம். விந்து நாதங்களிரண்டையும் ஐக்கியப்படுத்துவதே இந்த முத்திரையின் முக்கிய சாதனமாம். பிராணாயாம சித்தியால் வாயுவின் பலங்கொண்டு விந்து நாதங்களைக் கீழ் நோக்கிச் செல்லாதபடி,மேலே யிழுத்துக் கொள்வதாம். இதற்குத் திடசரீரமும், அழகும் ரோகமற்றதுமான சரீரமும் யௌவனபருவமுமுடைய ஸ்திரீயும், நிரம்பப்பாலும் சாதனப்பொருள்களாகும். இவ்விரண்டு முடையவன்தான் இந்த முத்திரையை அப்பியாசிக்க வேண்டும். ஆடவர்க்குக் கூறியபடியே பெண்களுக்கும் கொள்க. பிராண வாயுவை மேலே இழுக்கவும் வெளியில் விடவும் நன்றாய் அப்பியாசித்திருக்க வேண்டும். இது, உலையில் துருத்தி ஊதுவதுபோல வாயுவை இழுக்கவும், வேண்டும்போது ஸ்திரீ புணர்ச்சிக்கும், பால் புணர்ச்சியிற் குடிப்பதற்குமாம். புணர்ச்சியால் விந்து பலவீனப்படுமாதலால் அதனை நீக்கும் பொருட்டுப் பாலருந்துவது நியாயமாம். இதனால் நழுவின விந்துவை மேலே ஆகருஷிக்கும் சக்தியுண்டாகும்.

அப்பியசிக்கும் முறையாவது:—ஈயத்தால் மெல்லிய குழல் செய்து கொள்ளவேண்டும். அது இலிங்கத்துக்குள் புகத்தக்கதா யிருக்கவேண்டும். பதினாலு அங்குல அளவுள்ள நீளமுடையதா யிருக்கவேண்டும். இவ்வாறு செய்யப்பட்ட ஈயச்சலாகையைப் பிரயத்தன பூர்வமாக இலிங்கத்துக்குட் செலுத்தவேண்டும். ஒருநாளுக்கு ஒரு அங்குல அளவு செலுத்தவேண்டும்.

இப்படியே பன்னிரண்டு அங்குல அளவு உள்ளே செலுத்தவேண்டும். பன்னிரண்டும் சென்றால் இலிங்கஸ்தானம் வஜ்ரோலிக்குத் தகுதியுள்ளதாயிருக்கும். பதினாறு அங்குல நீளமுள்ள ஈயச்சலாகையைப் பன்னிரண்டு அங்குலம்விட்டு மிச்சமாயுள்ள இரண்டு அங்குலத்தையும் வளைத்துவிடவேண்டும். இந்தச்சலாகை குழல்போல உள்துவாரமுள்ளதாகச் செய்யப்படுவதால் உள்ளே வாயு புகவும் வெளிவரவும் சௌகரியமாயிருக்கும். இதனால் பிராணாயாம பலங்கொண்டு வாயுவை வெளியில் விடவும், உள்ளே இழுக்கவும் பழகவேண்டும். கொல்லன் துருத்தி ஊதுவதுபோல ஊதிப் பழகவேண்டும். வாயு நன்றாய் வெளிப்படவும் மீண்டும் உள்ளே வரவும் பழகினபிறகு அந்த மார்க்கம் சுத்தமாகும். அதன்பின் இலிங்கத்தினால் ஜலத்தை உள்ளே யிழுக்கவும் வெளிவிடவும் பழகவேண்டும். இந்த அப்பியாசம் கைகூடினபின் விந்துவை மேலே இழுத்துக்கொள்ளப் பழகவேண்டும்; இது கைகூடினால் வஜ்ரோலி சித்தித்ததாம். கேசரியும் பிராணனும் வசப்பட்டவனுக்குத்தான் இது சித்தியாகும்.

இது சித்தித்தபின் புணர்ச்சிகாலத்தில் நழுவுமுன் விந்துவை மேலேயிழுத்துக்கொள்ளவேண்டும். அது தவறினால் விழுந்தபின் இந்த முத்திரையின் பலத்தால் மேலே யிழுத்துக்கொள்ளவேண்டும். அத்துடன் நாதம் என்னப்படுகிற ஸ்திரீயின் இரஜஸையும் இழுத்துக்கொள்ளவேண்டும். விந்து ஒழிந்துபோவதால் மரணமும், அது சரீரத்தில் நிலைத்து நிற்பதால் அழியாமையு முண்டாகுமாதலால், இது சித்தியானவன் மரணத்தை ஜயித்தவனும். எத்தனைகாலம்வரையில் சரீரத்தில் விந்து அழியாமலிருக்கிறதோ அதுவரையில் அவன் மிருத்தியுவை ஜயிக்கிறான். அதுவரையில் அவனுக்கு மரணபயமேயில்லை. பிராணன் சுக்கிலத்தில் நிலைத்திருக்கிறது. அந்தச் சுக்கிலம் சலனமற்ற மனதின் வழிப்பட்டது. அவ்விரண்டும நிலைகெடாமல் அடக்கி வைத்திருப்பதே யோகிகளுக்கு இலக்ஷணமாம்.

(தொடரும்.) சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

உ
சிவமயம்




## எறிபத்தநாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

(68-ம் பக்கத் தொடர்ச்சி.)

இவ்வன்பு இல்வழி இறைவனை ஒருவாற்றானும் அடைதல் முடியாது. அது,

"உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற்
கள்ள முள்ளவ ருக்கருள் வானலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே."

" நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் ஞர்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப னவர்தமை நாணியே."

எனவருந் திருநாவுக்கரசுநாயனர் தேவாரங்களானும்,

" தேவதேவன் மெய்ச்சேவகன் றென்பெருந் துறைநாயகன்
மூவராலுமறி யொணுமுத லாய்வானந்த மூர்த்தியான்
யாவராயினு மன்பரன்றி யறியொணுமலர்ச் சோதியான்
றூயமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னிச் சுடருமே."

என்னுந் திருவாசகத்தானும்,

" என்பே விறகா விறைச்சி யறுத்திட்டுப்
பொன்போ லெரியிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி யகங்குழைந் தார்க்கன்றி
என்போன் மணியினை யெய்தவொண் ணுதே."

என்னுந் திருமந்திரத்தானும்,

" கருமமா தவஞ் செபஞ் சொல் காசறு சமாதி ஞானம்
புரிபவர் வசம தாகிப் பொருந்திடேம் புரையொன் றின்றித்
திரிவறு மன்பு செய்வோர் வசமதாய்ச் சேர்ந்து நிற்போம்
உரைசெய்வோ மவர்மு னெய்தி யவருளத் துறைவோ மென்றும்."

என்னும் வாயு சங்கிதையானும்,

" கனிந்து கனிர்—தழுதார்க்கு முன்னிற்கு மகிலநாயகன் "

என்னுந் திருப்பெருந்துறைப் புராணத்தானும் அறியப்படும்.

ஆதலினலன்றே,

" அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
யறிவுதனை யருளினு னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின்."

(சிவஞானசித்தியார்-8-ஞ் சூத்திரம்)

என்று சிவஞானசித்தியார் கூறுகின்றது.

இவ்வன்பானது ஒருவர்க்கு, அவர், பல பிறவிகளில்லே பயன் குறியாது செய்த புண்ணிய மிகுதியினுலே சிவபெருமானருளிச்செய்யவரும். அவனருளின்றி, இவ்வன்பு ஒருவாற்ருனும் நிகழாது. இத்தகைய அன்பானது இடையருது முறுகி வளரின் அம்முதிர்ச்சியிலே சிவம் விளங்கும். ஆதலால் அன்பும் சிவமும் இரண்டற அபேதமாய் நிற்கும்.

" பக்தி வலையிற் படுவோன் காண்க " (திருவாசகம்)

என்றும்,

" ஆரேனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா
ணுரேனுங் காணு வரன்." (திருக்களிற்றுப்படியார்-15.)

என்றும்,

" அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந் திருப்பாரே." (திருமந்திரம்)

என்றும்,

"மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் றெளிவே சிவபெரு மானே திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே யென்னுடை யன்பே."

(திருவாசகம்)

என்றும் கூறியிருத்தல் இதுபற்றியேயாம்.

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்

---

நமது போதினி பிரபவ ஆடி மாத சஞ்சிகை 29-ம் பக்கத்தில் உள்ள

## பௌர்ணமி பூஜை வினாவிற்கு விடை.

(க. சு. அனந்தநாராயணய்யர் எழுதுவது.)

இந்தப் பூஜை செய்யவேண்டிய விதிகளும், இதனால் அடையப்படும் பயன்களும் பிர்மாண்டபுராணம் உத்திரகாண்டம் 37-வது அத்தியாயத்தில், அயக்கிரீவரிஷியால் அகஸ்தியமுனிவருக்கு உபதேசிக்கப்பட்டனவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

இதன் முக்கியபலன், உபாஸகனுடைய சரீரத்தில் பூர்வகன்மத்தால் உண்டாகும் எல்லா வியாதிகளும் நீங்கி, அவன் இவ்வுலகில் இல்லற சுக போகங்களைக் குறைவற அனுபவிப்பதுமல்லாமல் பரத்திலும் சுவர்க்காதி போகங்களையு மனுபவிப்பதேயாம்.

சூரிய உதய சமயத்தில் பௌர்ணமி திதி இருக்கும்நாளே இந்தப் பூஜைக்குரிய நாளாம். இத்தினத்தில் பூஜைசெய்வோர் விடிய ஐந்துநாழிகைக்கு எழுந்து சரீரசுத்திசெய்து ஸ்நானம் முதலியன விதிப்படி முடித்து வழக்கப்படி தெய்வவழிபாடுகளையும் செய்து பகலில் உபவாசமா யிருக்கவேண்டும்.

மாலையில் திரும்பவும் ஸ்நாநம் செய்து பூஜைக்குவேண்டிய பழம், புஷ்பம், சந்தனம், பன்னீர் முதலியவைகளைச் சேகரித்துக்கொண்டு வீட்டு முற்றத்தில் சந்திரமண்டலத்தை நன்றாய் பார்க்கக்கூடிய ஒரு இடத்தில் பசுவின் சாணியால் சுத்திசெய்து கோலங்களிட்டு அலங்காரங்களையும் செய்து தீபங்களையும் அழகாய் அமைக்கவேண்டும்.

பிறகு ஆசாரியரின் உத்தரவுப்படி பூஜையைத் தொடங்கிச் சந்திரமண்டலத்தில் பரிவார தேவதைகளுடன் பார்வதி தேவியை பிரத்யக்ஷமாகத் தியானித்து, அத்தேவிக்கு ஆஸனம், பாத்யம், அர்க்கியம், ஆசமனீயம், மதுபர்க்கம், ஸ்நாநம், வஸ்திரம், சந்தனம் புஷ்பம், நைவேத்தியம், தாம்பூலம், கர்ப்பூரம், நீராஞ்சனம், பிரதக்ஷிணம், நமஸ்காரம், ஸ்தோத்திரம் முதலிய உபசாரங்களைச்செய்து இவை யாவையும் தேவீ பிரத்யக்ஷமாய் அங்கீகரித்ததாகத் தியானித்துப் பூஜையை முடித்து ஆசாரியரையும், பெரியோர்களையும் வணங்கி, அவர் ஆசீர்வாதங்களைப் பெற்று, அவர்களுடனும் இஷ்டபந்துக்களுடனும் இருந்து ஸத்துவகுணமுள்ள ஆகாரங்களை உட்கொண்டு பக்தியுடன் இருக்கவேண்டும். சுபம்.

குறிப்பு:—நமது போதினி சந்தாதார், வெள்ளைய முத்திரியர் என்பவரும் இதற்கு மற்றொருவகை விடை யெழுதியிருக்கின்றார். ப-ர்.

---

*



# வைணவம்

## ஸ்ரீ ஆண்டாள்.

(83-ம் பக்கத் தொடர்ச்சி.)

வில்லிபுத்தூர்க்கோன் கோதை, கன்றினம் மேய்த்துத்திரிந்த கோவலனைத் தன் எண்ணத்திலிருத்திப் பல பல பிதற்றினள். அவள் அவனைச்சுட்டி "நின்னை அடியார் பக்தவத்ஸலன் என்பர். யான் வாத்ஸல்யத்தை நின்னிடம் காண்கிலேன். உண்டாயின் கன்றை ஈன்ற பசுவினிடமிருந்து, கன்றினிடத்து வாத்ஸல்யம் நெகிழ்தலே போன்று, அதுதான் என்போல்வாரிடத்தும் நெகிழ்வதாகும். பசுவின் கன்றே தாயுடலிருந்து வந்தவப்பொழுது தன்னுடலெங்கும் மிகுதியும் வெறுக்கத்தக்க அசுத்தமே நிரம்பப்பெற்றிருக்கும். அதுகண்டும் அதனை ஈன்ற பசு, தன் கன்றென்னும் வாத்ஸல்யத்தால், அக்கன்றின் உடல் அழுக்கைக்கண்டு முகஞ்சுளித்தலின்றிப் பெற்றேமென்ற வெண்ணமேகொண்டு அகமும் முகமும் ஒருங்கே மலர அவ்வழுக்கைத் தந்நாக்கொண்டு நக்கிச் சுத்தஞ் செய்வதாகின்றது. அவ்வாறே தன்னடியார், எத்துணை இழிந்த, வெறுக்கத்தக்க குற்றமே பொதியப்பெற்றிருப்பினும், வெறுப்பின்றி விருப்பேகொண்டு தன் கிருபையால் அவர் குற்றந்துடைத்துக் குணமாகக்கொள்வதன்றே வாத்ஸல்யமாவது. தான் ஈன்ற கன்றைத் தூய்தாகவாக்கும் ஆனினத்தையன்றே நீ காப்பவனாகிக் கோபாலன் என்னும் பெயரும் சூடினை. அப்பசுக்களின் சேர்த்தியாலேனும் வாத்ஸல்யமாகின்ற பெருங்குணம் நின்னிடத்துப் பெருவெள்ளமெனப் பெருகுதல் கூடுமே. நீ அதனைக் கொண்டவனாக என் மனங்கொண்டிலதே" என்று புலம்பினள்.

சற்றுநேரத்திற்கெல்லாம் ஆண்டாளுக்கு, அவன் வாத்ஸல்யமுடையான் என்ற உணர்வு உதித்தது. அப்பொழுது அவள் வேறு சொல்வாளாயினள்.

ஆண்டாள்:—கண்கள் காண்டற்கினியாய்! தன் குற்றங்காணாமே பிறன் குற்றங்காணும் பேதையேபோன்ற யான் ஒரு பேதையேன். யான் என் பேதைமையால் உரைத்தவற்றிற்குச் சீற்றங்கொள்ளாதிருக்கப் பிரார்த்திக்கிறேன். கத்திரபந்துவையும் நின்னடிக்குரியனாகச் செய்துகொண்ட நின்னையோ யான் வடுப்படவுரைப்பது! நின்னருள் கைகூடப்பெற்ற வக்காலத்து, கத்திரபந்துவுக்கு நீ ஆகாதெனச் சொல்லிய உயிர்க்கொடுமையை அவன் தன் நெஞ்சில் நிறுத்திலனே. அவன் நெஞ்சில் நிறுத்தியவெல்லாம் நின்னைச் சுட்டு மூன்றெழுத்தாலாகிய 'கோவிந்தன்' என்னும் பெயரொன்றேயன்றே? அம் மூவெழுத்தினையே அவன் முழுப்பொழுதும் சொல்லி வழுத்தினனாக அவன் குற்றமத்தனையும் காணாதொழிந்தனையே. மேல், அவன்

செய்த விழி தொழில்களெல்லாம் 'பல வென்னலாம்' என்று ஒருவர் சொல்ல லாம் படியாகவிருக்க அவனுக்கு உயர்கதியையும் அல்லவா அளித்தனே. நீ அவ்வாறு அளித்தமைதானும்,

"மொய்த்தவல் வினையுள் நின்று மூன்றெழுத் துடைய பேரால்
கத்திர பந்து மன்றே பராங்கதி கண்டு கொண்டான்" (திருமாலை-4)

என்று, என்றும் புகழும்படியாக வன்றோ நிற்பதாகின்றது. இந்நிகழ்ச்சி யறியாதேன் தகாதன சொல்லிப் பிழைத்தேன். நோயுடையான் தீம்பால் கசந்ததென்றால் அப்பாலுக்கு இழிவு வந்ததாகுமோ? அவ்வாறே, யான், என் புல்லிய நாக்கொண்டு உரைத்தன நின்பெருமைக்கு இழிவைத் தரு வனவாமோ? இல்லை. இல்லை. ஒன்றுந் தருதல் இல்லை. வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! பின்னையும் கேள். நீ, நின்னுடையவும் அடைந்தா ருடையவும் முன் நிகழ்ச்சிகளை நினையாமே அருளுந் திறத்தாலன்றோ நின்னை, நின்னடியார் 'பித்தன்' என்று அழைப்பர். பித்துத்தன்மையுடையான் நீ என்பதை, நீ பொல்லாவரக்கன் இராவணன்பால் காட்டியவருளால் உலகங் கண்டதில்லையோ. இராவணன் நின்னிடத்துச் செய்தபிழை மனத்தாலும் நினைக்கத் தகாத தொன்றன்றோ. தன்னடியார்க்குத் தான் புருஷாகாரமாய் நின்று உன்னருளால் அவர்கள் இடரை உன்னைக்கொண்டு தீர்ப்பித்து, நினக் குப் புருஷோத்தமன் என்னும் பெயர் வழங்கவும் "அலர்மேல் மங்கையுறை மார்பா" என்று நின்னை அழைக்கும்படியாகவும் நின் மார்வத்தையே யுறையு மிடனாகக்கொண்டு நின்னைவிட்டகலாத உலகமாதா ஜானகியார்க்கு அன்றோ அவன் பெரும்பிழை செய்தது. நீ அவ்விராவணனையும் நினது அருளுக்கு இலக்குடையவனாக்க இரங்கினையே. முன்னர், ஸ்ரீ சிறிய திருவடியைத் தூது வனாக விடுத்து அவனுக்கு இனியன கூறிவர அருளினையே. ஈதொன்றோ! இராவணன், தன்வலியே கருதினவனாய் நின் கருணை விரவிய பேராற்றலை அறிவுடையார் எடுத்துரைக்கவும் கேளானாய் நின்னை யெதிர்த்த ஞான்று கணையொன்றால் அவன் காலத்தை முடிக்கும் வலி நினக்கிருந்தும், நின் வலி கண்டேனும் தன்னறிவு பெற்று உய்வானாக வெண்ணி, அவன் வலி தொலைத்து 'இன்றுபோய் நாளைவா பொர' என்று விடுத்தனையன்றே. நினது இச்செய்கையில் அவனைக் கொல்லவிருந்த உனது முன்னைய எண் ணத்தை மாற்றி அவனுய்ந்து அடியவனாகவன்றோ வெண்ணினை. இவ்வாறு நினைத்த நீ பித்தனே யன்றோ? ஆதலினாலன்றே, எவ்விழிவினை யுடையவ ரேனும் நின்னருளால் நின்னருள் பெற்று உயர்கதி காணுதலாகுமென்னுந் துணிபால், கத்திரபந்துவுக்கு நீ பராங்கதி யளித்த திறங்குறித்து "இத்தனை யடியரானார்க்கிரங்கும் அரங்கனாய, பித்தனைப் பெற்று மந்தோ பிறவியுள் பிணங்குமாறே" (திருமாலை-4) என்று நின் பெருமை பேசக் கிடந்ததூஉம்.

இவ்வகையில் உள்ளுவாருள்ளத்துள்ளுறையுஞ் சோதியாம் மெய்ஞ் ஞானக் கண்ணனைக் குறித்துத் தன் பக்கல் எழுந்த காதல் வேட்கையால், பேசரிய வுயர் குணத்துக் கோதை அவன்றன்னை அகலகில்லாது அவனோடு

கலந்து வாழ்தற்கு ஆகும்வகையே சூழ்ந்தனள். எம்பிரானைத் தம்முள்ளிருத்திய தகவுடைப் பெரியாழ்வார் பெண்பிள்ளையாய்த் திருத்துழாய் நறுமணங்கொண்டே அங்குரிக்குமாப்போலே யவதரித்த எம்மாண்டாள் இச்சூழ்ச்சியிலாழ்ந்ததொரு வியப்பேயோ! ஆண்டாளுக்குப் பிறப்புத் தொடங்கியே யெம்பெருமான் பக்கல் எழுந்த காதல் நோய், அவன் தன் தந்தையின் ஒழுக்கத்தாலும், தந்தை அவளுககு அவள் இளமைமுதல் அடைவிற் சொல்லிவந்த அவன் சீர்குறித்த சரித்திரங்களாலும் செயற்கை வளமுட்கொண்டு நாளும் பெருகுவதாயிற்றன்றே. ஆண்டாள், தனக்குத் தன்னப்பனார், ஸ்ரீ கண்ணன் பக்கல் கோகுலவாசிகளான இடைச் சிறுமியர்வைத்த பிரேமையினையும், அவர்களுடைய எண்ணம் ஈடேற நோன்பு நோற்கும் பேறு அவர்களுக்குக் கிடைத்தகாலையில் அவர்கள் கடல் வண்ணனையே தமக்கு நிர்வாஹனாகக் கருதி நோன்பு நோற்ற படியையும் சொல்லியதையும் நினைத்தவளாய்த் தானும் அவர்களேபோன்று அவனைக் காணுதலாகுந் திறத்து நோன்பு கொள்ளும் கொள்கைகொண்டாள்.

(தொடரும்) N. திருவேங்கடத்தையங்கார்.





## ஆத்திசூடி உதாரணக்கதைகள்

(75-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "கேடுப்பதொழி"

"கெடுப்பது-(பிறரைக்) கெடுத்தலாகிய தொழிலை, ஒழி-(மனிதனே! நீ) விட்டுவிடக்கடவாய்" என்பது இதன்பொருள்.

உலகத்தில் மனிதராய்ப் பிறந்தவர்கள், தம்மால் கூடியவரையில் பிறருக்கு நன்மையே புரியவேண்டும். அவ்வாறு நன்மை புரிவார்க்குக் கடவுள் துணை செய்வார்; கடவுள் கிருபையால் அவர்கள் எப்பொழுதும், எவ்விடத்தும் சுகமே பெறுவார்கள். அவ்வாறின்றி, அவர்கள் சுயநலங்கருதியோ, வேறு காரணமாகவோ பிறருக்குத் தீஙகு செய்வாராயின் கடவுள் அவர்களைத் தண்டிப்பார்; அவர்களுக்குத்தாமே பல கெடுதிகள் சம்பவிக்கும். அவர்கள் இவ்வுலகத்தில் பலதுன்பஙகளை அடைவதோடு இறந்த பின்னரும் நரக வாதனை யடைவார்கள். "கெடுவான் கேடுநினைப்பான்" என்றபடி, உலகத்தில் கேடுகளை அடையவேண்டியவனே பிறருக்குக் கேடு நினைப்பான். இவ்வாறு பிறரைக் கெடுக்க நினைத்துக் கெட்டவர்களின் கதைகளில் ஒன்றை இதனடியில் விளக்குவாம்:—

ஒருமனிதன், ஒருகாரியத்தின் பொருட்டு ஆயிரம் ரூபாய்கள் அடங்கிய ஒரு பையை எடுத்துக்கொண்டு தன் ஊரிலிருந்து வாடகை வண்டியொன்று அமர்த்தி அதிலேறி நெடுந்தூரத்திலுள்ள ஓர் ஊருக்குப் புறப்பட்டான். அவ்வாறு புறப்பட்டுப் பதினைந்துமைல் தூரம் கடந்து ஒரு கிராமத்தைச்

சமீபித்தபோது இரவு வந்துவிட்டது. அவ்விரவில் பணத்துடன் அவ்வூருக்கப்பால் செல்ல அவனுக்கு மனந்துணியவில்லை. எனினும் மறுநாள் காலையில், தான், குறித்த ஊருக்குப்போகவேண்டிய அவசரம் அவனுக்கேற்பட்டிருந்தது. அதனால், அவன், அவ்வூரில் துணை தேடிக்கொண்டாவது அவ்விரவில் பிரயாணம் செய்யத் துணிந்தான். அவ்வூரில், அவனுக்குத் தெரிந்த ஒரு மனிதனிருந்தான். அவன் அவ்வூருக்குப் பெரிய மனிதன். ஆதலின், அவனிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்தால் அவன் தனக்குத் துணையாட்கள் சேர்த்து விடுவானென்று, பிரயாணி நினைத்து அவனைக் கண்டு, "நண்பரே! நான் பணம் கொண்டு செல்கிறேன்; விடியும் வரையில் எனக்குத் துணையாக வரும்படி நீங்கள் இரண்டு ஆட்களை என்னுடன் அனுப்பவேண்டும்" என்று அவனிடம் தெரிவித்தான். அவனுக்கு உடனே அப்பணத்தின் மேல் ஆசையுண்டாகிவிட்டது. அதனால் அந்தச் சண்டாளன், "எப்படியாவது நடுவழியில் இவனைக் கொலை செய்துவிட்டு அந்தப்பணத்தைக் கைப்பற்றவேண்டும்" என்று முடிவுசெய்து கொண்டான்.

அதன்மேல், பிரயாணிக்கு, "நான் அப்படியே உதவிக்கு ஆளனுப்புகிறேன்" என்று கூறிவிட்டுத் தனக்குத் தகுந்த இரண்டு போக்கிரிகளிடம் சென்று, "ஒருமனிதன் அதிகப்பணத்துடன் வந்திருக்கிறான்; அவன் இவ்விரவில் பிரயாணஞ்செய்ய, இரண்டு ஆட்கள் துணையாக வரவேண்டுமென்கிறான்; நீங்களிருவரும் அவனுடன் சென்று அவனைத் தொலைத்துவிட்டுப் பணத்தைக் கொண்டுவந்துவிட வேண்டும்; நாம் எல்லோரும் பங்குபோட்டுக் கொள்ளலாம்; அவனுடன் வண்டிக்காரன் ஒருவன் வந்திருக்கிறான்; அவனையும் நம்மோடு சேர்த்துக் கொள்ளலாம்; நாம் இரகசியமாக இவ்வேலையை முடித்தால் கேஸ் வெளிக்கு வராமல் மறைந்து விடும்" என்று சொல்லிக் கொலை செய்வதற்குத் தகுதியான இடத்தையும் தெரிவித்தான். அவர்கள் அக்கொலைத் தொழிலுக் கிசைந்தார்கள். பின்னர் அம்மூவரும் வண்டிக்காரனை அழைத்து இரகசியமாக அவனிடம் தாங்கள் உத்தேசித்திருப்பதைக்கூறி, "நீயும் எங்கள் செய்கைக் கிணங்கியிருந்தால் பணத்தில் பங்கு பெறுவாய்" என்றார்கள். அவன் கூலிக்காரனானதால், தனக்கு அதிகப் பணம் கிடைக்கும் அவ்விஷயத்திற்குச் சுலபமாக இணங்கிவிட்டான்.

பின்னர் அந்தப் பெரிய மனிதன், தன்னுடன்வந்த கொலைபாதகர்களை அழைத்துக்கொண்டு போய்ப் பிரயாணியிடம் காட்டி, "நீ இவர்களைத் துணைக்கு அழைத்துக்கொண்டு போகலாம்" என்று சொன்னான். அதன்மேல் பிரயாணி அவர்களுடன் தன் வாடகை வண்டியிலேறிப் புறப்பட்டான். அவனுடன் சென்றவர்கள் பயங்கரமான ஆயுதங்களை வைத்திருந்தார்கள். பிரயாணி அவர்கள்மீது சந்தேகங்கொள்ளாமல், அவ்வாயுதங்கள், தன்னுடைய பாதுகாப்பிற்காக அவர்களால் கொண்டுவரப்படுகின்றன என்று நினைத்தான். வண்டி நெடுந்தூரஞ்சென்று ஒரு காட்டின் நடுவில் அந்தப் பெரியமனிதன் குறிப்பிட்டவிடத்திற்குச் சமீபத்திற் சேர்ந்தது. அப்போது துணைக்குச்சென்ற மனிதர்கள், பிரயாணியிடத்தில், "நாம் இராமுழுவதும் கண்விழித்துக்கொண்டு போவதானால் கஷ்டமாயிருக்கும்; இங்கே சிறிது நேரம் படுத்து உறங்கிவிட்டுப் போகலாம்; நாங்கள் இருக்கும்போது நீ எதற்கும் அஞ்சவேண்டியதில்லை" என்றார்கள். பிரயாணி சந்தேகப்படாமல் அதற்கிசைந்தான். பின்னர் அவர்கள், வண்டியை, ஒருபக்கத்தில் விலக்கிக் கொஞ்சதூரத்திற் கப்பாலிருந்த ஒரு மணலோடையில் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அதுதான் அம்மனிதன் குறிப்பிட்டவிடம். பிரயாணி ஒரு துப்பட்டியை எடுத்து மணலில் விரித்துப் பணப்பையைத் தலைக்கு வைத்

துப் படுத்துக்கொண்டான். மற்றவர்களும் துணிகளை விரித்துப் படுத்துக் கொண்டார்கள்.

சிறிதுநேரம் சென்றபின், வண்டிக்காரனும் மற்ற இருவரும் பிரயாணியைக் கொலைசெய்வதற்குரிய தந்திரங்களை யோசிப்பதற்குத் தனியிடம் செல்ல உத்தேசித்து, "நாங்கள் ஜலபாதைக்குப் போய் வருகிறோம்" என்று பிரயாணியிடம் சொல்லிவிட்டுச் சிறிதுதூரத்திற் கப்பால் சென்று ஒருசெடி மறைவிலிருந்து மெதுவாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது பிரயாணிக்கு அவர்கள் நடைக்கையில் சந்தேகம் உதித்தது. அதனால், அவன், விரித்த துப்பட்டியை அப்படியே போட்டுவிட்டுப் பணப்பையை எடுத்துக் கொண்டு பூனைபோல் பதுங்கி நடந்துபோய், அவர்கள் இரகசியம் பேசுமிடத்திற்குப் பக்கத்தில் ஒரு செடிமறைவிலிருந்து அவர்களுடைய பேச்சைக் கேட்டான். அவர்கள் தன்னைக் கொலைசெய்வதைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தது அவனுக்கு விளங்கிவிட்டது. உடனே அவன், "அப்பா! நான் பிழைத்தேன்" என்று, தான் படுத்திருந்த இடத்திற்குப் பக்கத்திலிருந்த ஒரு மரத்தடியிற்போய் மறைந்து, பின்னால் அவர்கள் என்ன செய்கிறார்களென்று கவனிக்கலாமென்று உட்கார்ந்திருந்தான்.

அப்படியிருக்கும்போது அவனைக் கொலை செய்யும்பொருட்டு அந்த ஆட்களை யனுப்பிய அப்பெரிய மனிதன், பேராசைகொண்டு, "அவர்கள் அந்தப்பணத்தில் கொஞ்சத்தை மறைத்துவிட்டு மீதியை நமக்குக் காட்டினாலும் காட்டுவார்கள்; ஆதலின், நாமும்போய் அவர்களுடன் கலந்து கொள்ளவேண்டும்" என்று தீர்மானித்து வேகமாக நடந்துவந்து அங்கே பார்த்தான். பிரயாணியின் துப்பட்டிமாத்திரம் விரிக்கப்பட்டிருந்தது. மனிதர் எவருமில்லை. அதனால் அவன், "சரி; அவர்கள், அவனைக்கொன்று புதைக்கக் கொண்டுபோ யிருக்கிறார்கள்; அவர்கள் வரும்வரை நாம் இத் துப்பட்டியில் படுத்திருக்கலாம்" என்று அதில் படுத்துக்கொண்டான். அவனுடைய கெட்டகாலத்தால் அவனுக்கு மிகுந்த நித்திரை வந்துவிட்டது; சிறிதுநேரத்திற்குள் அவன், குறட்டைவிட்டுக் கும்பகர்ணனைப்போல் தூங்கினான். கொலையைப்பற்றி இரகசியம் பேசிக்கொண்டிருந்தவர்கள் ஒருமுடிவு செய்துகொண்டு விரைந்து அங்கே வந்தார்கள். அந்த மனிதன் குறட்டைவிட்டுத் தூங்குவதைப் பார்த்துவிட்டுப் பிரயாணிதான் தூங்குகிறானென்று நினைத்து அவன் கழுத்தை ஒரே வெட்டில் வெட்டித் துண்டித்துவிட்டார்கள். பிரயாணியைக் கொல்ல நினைத்த அப்பாவி, தானே மடிந்தான். அவர்கள் விரைந்து அவனுடைய சவத்தை எடுத்துக்கொண்டுபோய் ஓரிடத்தில் புதைத்துவிட்டுத் திரும்பிவந்து பணப்பையைத் தேடினார்கள். அது பிரயாணிகையிலிருக்கும்போது அவர்களுக்கு எப்படி அகப்படும்? நெடுநேரம் வரை அவர்கள் தேடித் தேடிப் பார்த்து இளைத்து முடிவில், "நாளைப் பகலில் வந்து அதைத் தேடியெடுத்துக்கொள்ளலாம்" என்று வண்டியுடன் திரும்பிக் கொலைசெய்யத் தங்களைத் தூண்டிய அந்தப் பெரிய மனிதனுடைய ஊருக்குப் போனார்கள். அங்கே அந்த மனிதன் இல்லாதபடியால் பலவித சந்தேகங்களைக்கொண்டு மனங் கலங்கியிருந்தார்கள்.

பிரயாணியோ அங்கு மறைந்திருந்து நடந்தவற்றையெல்லாம் தெரிந்துகொண்டு புறப்பட்டு அடுத்த ஊருக்குப்போய், அங்கிருந்த அதிகாரியிடம் எல்லா விவரங்களையும் கூறினான். அதிகாரி அந்தப் பிரேதத்தையும் எடுத்துக் குற்றவாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டித்தார்.

**செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.**



# உரை மணி மாலை.

(76-ம் பக்கத் தொடர்ச்சி.)

தன் நலத்தை அடியோடு மறந்து பிறர்க்குப் பரோபகாரம் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பவனுக்குத் துக்கம் நேரிடாது. அவன் பரம தரித்திரனுயினும் சந்தோஷமுடையவனு யிருப்பான்.

* * *

குழந்தைகளுக்கு, "பிசாசு உண்டு! பூச்சாண்டி பிடித்துக்கொள்வான்!!" என்ற பயங்களைக் காட்டி அவைகளைப் பயங்காளிகளாக்குவது மிக்க பேதைமையான காரியமாகும்.

* * *

நமது இருதயத்தில் கடவுள் இருப்பதை நாம் மறக்காமலிருப்போமானுல் கெட்ட காரியங்களைச் செய்யமாட்டோம்.

* * *

பிறர் நமக்குச் செய்துள்ள தீங்கிற்குப் பதிலாக அவர்களுக்குத் தீங்கிழைக்காதிருத்தலே அவர்களுக்குப் பெருத்ததண்டனைபோலாகும்.

* * *

உண்மையான புத்திமானெவனும் தன்னலம் பாராட்டியது கிடையாது.

* * *

உலகமென்ற கானகத்தில் பொய், கொலை, களவு, காமம் முதலிய பல துஷ்ட மிருகங்களிருக்கின்றன. இவற்றில் எதற்கும் அடிமையாகா திருப்பவரே அறிவிற் சிறந்தோராவர்.

* * *

ஒரு வருஷத்திற்கு ஒன்றுவீதம் கெட்டகுணங்களை ஒவ்வொன்ருகப் போக்கிவந்தாலுங்கூட நமது கெட்ட குணங்களனைத்தும் கடைசியில் அடியோடு மறைந்துபோம்.

* * *

விரதங்கள் மனிதர்களுக்காக ஏற்படுத்தப்பட்டன. ஆனுல் விரதங்களுக்காக மனிதர் சிருஷ்டிக்கப்படவில்லை.

* * *

பணத்தாசையும், பெண்ணுசையும் மனிதனைப் பாழாக்கி விடுவன. இவை இரண்டில் ஒன்றையோ, அல்லது இரண்டையுமோகொண்டவன் இறுதியில் அழிந்துபோவான் என்பது திண்ணம்.

* * *

"விக்கிரகங்களை வைத்து ஆராதித்தல் அனுவசியம்" என்று இயம்புவோர் பேதையரே; வீடு கட்டும்போது அவசியமாயிருக்கவேண்டுவதெது? சாரமேயன்ருே? அதுபோல முக்திக்குரிய் மார்க்கங்களாய மாடிவீடொன்றைக் கட்டச் சாரமாகிய விக்கிரகாராதனம் மிக்க அவசியம்.

வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா.




# மாதரும் குடும்பமும்.

(79-ம் பக்கத் தொடர்ச்சி.)

குடும்பத்தில் எத்துணை கஷ்டங்கள் நேரிட்டாலும் மாதர்கள் அவற்றை யெல்லாம் பொறுமையாய்ச் சகித்துக்கொண்டு, அப்பொறுமையினுல் அக்கஷ்டங்களை யெல்லாம் செயித்து ஒற்றுமையாய் வாழ முயலவேண்டுமே யன்றிக் குடும்பத்தைக் கலைத்துத் தாமும் தம் கணவரும மாத்திரம் தனிமையா யிருந்து குடித்தனம் செய்தால் இவ்வளவு கஷ்டம் நேராதல்லவா வென் றெண்ணி அதற்காக முயற்சி செய்து, கணவர் மனதைக் கலைத்து, தனிக் குடியாகப் பிரிந்துவிடக்கூடாது. இதுவுமல்லாமல் வீட்டில் மாமனே, மாமியோ, நாத்தியோ, ஓரகத்தியோ யாரேனும் ஏதேனும் தம்மைக் கடுமை யாகத் தூஷித்துவிட்டாலும், கோபத்தையுண்டாக்கும் வேறு எக்காரியத்தை யேனும் செய்துவிட்டாலும், அதைத் தம்மளவிலே தாம் அடக்கிக்கொள்ள வேண்டுமேயன்றி, அதைத் தம் கணவருக்குச் சொல்லிப் பிணங்கிக் கொண்டு, அவர் மனம் புண்படும்படியாயும் கோபம்வரும்படியாயும் செய்து விடக்கூடாது. அப்படிக் கோள் மூட்டுவதால் தான் கலகம் நேரிடுவதும் குடும்பம் இரண்டாகக் கலைந்து சீர் குலைந்து போவதும் ஏற்படுகின்றன.

கணவரும் தாமுமாகத் தனியேயிருந்து குடித்தனம் செய்வது நன்மை யாகும் என்று பலர் நினைக்கின்றூர்கள். ஆனுல் அது அனுபவத்தில் பார்க்குங் காலத்தில் அநேக தீமைகளையே யுண்டாக்குகிறது. ஏனெனில் இந்த வியா சத்தில் ஆரம்பத்தில் நாம் சொன்னபடி, மனிதர்கள் துணையின்றி - சகாய மின்றி வாழ முடியாது. ஆகையால் தனிக்குடித்தனம் செய்வதால் எத்துணை கஷ்டங்களும் நஷ்டங்களும் நேரிடுகின்றன என்பதைச் சிறிது ஆராய் வோம்.

தனிக்குடித்தனம் செய்யவிரும்புவோர், சொந்த வீடாயினும் அல்லது வாடகைக்கு (குடிக்கூலிக்கு) எடுக்கும் வீடாயினும் தனி வீட்டில் குடித் தனம் செய்வது கஷ்டம். புருஷன் வெளியில் போகுங்காலத்தில் மனைவி தனியாகவே இருக்க நேரிடும். அவ்வாறிருப்பதால் எத்தனையோ கஷ்டங் கள் உள. இராக்காலங்களில் புருஷன் வெளியில் சென்றுவரவேண்டியதா யிருந்தாலும், அல்லது ஏதாயினும் அவசரகாரியமாய் வேற்றூருக்குச் செல்ல நேர்ந்தாலும் வீட்டில் யாரும் துணையில்லையே யென்று மனைவியைத் தனி யாக விட்டுச் செல்ல வியலாமல் கஷ்டப்பட வேண்டும். ஆகையால் புருஷன் எந்தக் காரியத்தைக்குறித்தும் இராக்காலங்களில் (சூரியாஸ்தமனம் முதல்) வெளியிற் செல்லமுடியாமல் பூதம்போல வீட்டைக்காத்துக் கிடக்கவேண்டும்.

மனிதர்களுக்கு வியாதி நேரிடுவது சர்வசாதாரணமாகையால் மனைவி ஏதேனுமொரு நோயினால் சங்கடப்படும்படி நேர்ந்தால், வீட்டைச் சுத்தஞ் செய்தல், சமைத்தல், மனைவிக்குவேண்டிய உதவிகளைச் செய்தல் முதலாகிய சகலகாரியங்களையும் புருடனே செய்தாகவேண்டும். அந்த நிலைமையில் கடைக்குப் போகவேண்டுமாயினும் அவனே போகவேண்டும். உத்தியோகத் திற்கோ அல்லது வேறெந்தத் தொழிலுக்கோ போய்த்தீரவேண்டும். ஒரு கால் புருஷன் உத்தியோகஸ்தனாயிருந்தால் லீவு எடுத்துக் கொள்ளலாம். அதுவும் திடீரென்று நினைத்தபோதெல்லாம் எடுத்துக்கொள்ள முடியுமா? அதற்கு மேலதிகாரிகளின் உத்தரவுபெற்றாகவேண்டும். இதிலும் எவ்வளவோ கஷ்டமிருக்கிறது. கூலிவேலை செய்கிறவனானால் வேலைக்குப் போகாமலிருந் தால் செலவிற்குப் பணம் கிடைக்காது. வியாபாரியானால் வியாபாரஸ்தலத் திற்குப் போகாமல் நஷ்ட முண்டாகும். இந்த நிலைமையில் அப்புருஷன் படும் கஷ்டம் சொல்லமுடியுமா? முடியாது! முடியாது!! தவிர,

புருஷன் வியாதியடைந்தானென வைத்துக்கொள்வோம். அப் பொழுது மனைவியின் கதியாது? அவள் அக்கம் பக்கங்களிலிருக்கும் பெண் களிடம் சென்று, "ஐயோ! நான் திக்கற்றவளாயிருக்கிறேன். எனக்கு யாரும் துணையில்லை. அவர் (கணவர்) வியாதியால் அவஸ்தைப்படுகிறார். தக்க வைத் தியரை அழைத்துவருவோரில்லை. கடைக்குப் போவார் ஒருவருமில்லை. நான் என்னசெய்வேன்! எனக்கு ஒன்றுந்தோன்றவில்லை" எனக் கண்ணீர் விட்டுக் கதறி யழுவாள். அப்போது, அவர்கள் தங்கள் புருஷரிடம் அவளுக்குச் சிறிது உதவிசெய்யச் சொல்வார்கள். அவர்கள் எத்தனை நாளைக்குத்தான் செய்வார் கள்? ஒருவேளை இரண்டுவேளை செய்வார்கள். ஏன்? நம் மனிதர்களென்று வீட்டில் இரண்டொருவரிருந்தால் எவ்வளவு உற்றதுணையாவார்கள். நம்மை ஆற்றவும் தேற்றவும் ஓடித் தேடிப் பலரைக் கேட்டுத் தகுந்த வைத்தியரை யழைத்துவந்து அவருக்கு நோயாளியைக் காட்டவும் உதவுவார்களல்லவா?

(தொடரும்) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

## தனுஷ்கோடிக் கஸ்டம் ஆபீஸ்.

இந்தியாவிற்கும், இலங்கைக்கும் பல துறைகளிலும் நெருங்கிய பழக்க மிருந்து வருவது யாவரும் அறிந்த ஒன்று. இந்தியாவில் இருந்து இலங்கைக்கும், இலங்கையிலிருந்து இந்தியாவுக்கும் தினந்தோறும் நூற்றுக் கணக்கான ஜனங்கள் போக்கு வரவாக இருக்கிறார்கள். இதற்காகவே சிலோன் போட்மெயில் என்ற பெயரோடு ஒரு தனிவண்டித்தொடர் சென்னையிலிருந்து கொளும்புவரை ரெயில்வே கம்பெனியாரால் விடப்படு கிறது. ஆனால், தனுஷ்கோடியிலிருந்து தலைமன்னார்வரை, 20 மைல் தூரம் புகைக்கப்பலில் கடல் தாண்டவேண்டியிருக்கிறது. இலங்கைக் கேகும் பிரயாணிகள் தலைமன்னார்த் துறைமுகத்திற் சேரவே இலங்கை அரசாட்சி யின் சுங்க ஊழியர்கள்வந்து, எல்லா வகுப்புப் பிரயாணிகளையும் சுங்கப் பரி சோதனைசெய்து எவ்வித கஷ்டங்கட்கும் உட்படுத்தாமல் சகலரையும் மெயிலுக்குப் பாஸ் செய்து அனுப்புகிறார்கள். இலங்கையோ, இந்தியாவுக்கு அயல் நாடு. அப்படியிருந்தும் இன்னவர்கள் இந்தியாப் பிரயாணிகளைக் கண் ணுற்றதும் தம் தேசத்தவர்களென நினைவுற்று அவர்களுக்கு மெத்தவும்

சௌகரியம் செய்தனுப்பி வைக்கின்றனர். இவர்களின் நேர்மை மிகச் சரியானதே.

இலங்கைக்குச் சென்ற இந்தியாப் பிரயாணிகள் திரும்பித் தம் தாய் நாடாகிய இந்தியாவுக்கு வருங்கால், தனுஷ்கோடித் துறைமுகத்தில், இந்திய கவர்ன்மெண்டு கஸ்டம் ஆபீஸ் ஊழியர்கள் வந்து, 1, 2-வது வகுப்புப் பிரயாணிகளையும், இண்டர்கிளாஸ் பிரயாணிகளையும், 3 ம் வகுப்பு துரு மெயில் டிக்கட்டுள்ள பிரயாணிகளில் தமக்கிஷ்டப்பட்ட சிலரையும், ஸ்டீம் லாஞ்சு கப்பலில் வைத்து, இன்னவர்களை மட்டும் சுங்கப் பரிசோதனை செய்து காலதாமதப் படுத்தாமல் உடனே போட்மெயிலுக்குப் பாஸ் செய்து அனுப்பிவைத்துப் போட்மெயில் புறப்பட்டதும், கப்பலில் மீதியுள்ள, 3 ம் வகுப்புத் துருமெயில் டிக்கட்டுள்ள பிரயாணிகளை, கூலி டிக்கட்டுள்ள ஜனங்களுடன் சேர்த்து ரெயில் ஸ்டேஷனுக் கருகாண்மையிலுள்ள, சுங்கப் பரிசோதனைக் கொட்டகையில் அடைத்து, யாவர்களையும் பரிசோதித்துப் பகல், 12, 1-மணிக்கு வெளியில் விடுதலை செய்து, சாயுங்காலம் புறப்படும் இராமேஸ்வரம் எக்ஸ்பிரசில் ஏற்றுகிறார்கள். இந்தவண்டி இரவு சுமார், 12-12½ மணிக்கு மதுரைக்கு வருகிறது. இதில் துருமெயில் டிக்கட்டுள்ள பிரயாணிகளுக் கேற்படுந் துன்பமும், அசௌகரியங்களும் எளிதில் அளவிட்டுச் சொல்ல முடியா. இவற்றை வரையப்புகின் பத்திரிகையில் இடம் போதாது.

இந்தத் தனுஷ்கோடித் துறைமுகத்தில் நிகழும், கஸ்டம் ஆபீஸ் ஊழியர்களின் அட்டூழியங்களை நேரில் பார்த்தவரும், இந்தியப் பத்திரிகைகளில் முதலணியாக நிற்கும் 'மாடர்ன் ரிவ்யூ' பத்திராதிபருமான, 'ஸ்ரீமான் ராமானந்த சதர்ஜி' என்பவர், 1927, ஜூலை மாதத்தில், தம் மாடர்ன் ரிவ்யூ பத்திரிகையில் 'லெட்டர்' என மகுடம் புனைந்து வரைந்துள்ள வியாசத்தில், தனுஷ்கோடிக் கப்பலில் நடக்கும் சுங்கப் பரிசோதனை மிகக் கேவலமாயும், அதிகப்பிரசங்கித்தனமாயு மிருக்கிறது என்று அதைப்பற்றிப் பல குறைகள் கூறியிருப்பதுடன், 'இந்தியர் தம்முடைய தாய்நாடு—இந்தியாவுக்கு வருங்கால் தனுஷ்கோடியிலுள்ள வேலைக்காரர் இத்தகைய துன்பங்களை அவர்களுக்குச் செய்கின்றார்களே' யென்றும், 'அவர்கள் திரும்பி அன்னிய நாட்டிற்கே—சிலோனுக்கே போய்விடுவது நலமாகத் தெரியவருகிறது' என்றும் வரைந்துள்ளார். சகலவிஷய உணர்ச்சியுமுள்ள, இந்தக் கனதனவானாகிய 'இராமானந்த சதர்ஜி' என்பவரே, இத்தகைய பாடுபட்டு விட்டனர் என்றால், மற்ற பாமரர்கள் அடையும் துன்பங்கள் எவ்வாறிருக்கும் என்பதை இதைக் கண்ணுறும் புண்ணியவான்களே யோசியுங்கள்.

இனியாகிலும் இவ்விஷயத்தை, கனம் கவர்ன்மெண்டார் அவர்கள் நன்கு கவனித்து, 3 ம் வகுப்பு மெயில் டிக்கட்டுள்ள பிரயாணிகளைப் போட்மெயிலுக்கு உடனே பாஸ் செய்து அனுப்பிவைக்கும்படி மகா ஜனங்களின் வேண்டுகோளுக் கிசைந்து இப்பத்திரிகையின் வாயிலாகக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

C. K. வீரையநாயக்கர், கோயமுத்தூர்.

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.




## காகித உற்பத்தி.

(70-ம் பக்கத் தொடர்ச்சி.)

**கா**கிதஞ் செய்யு முறையில் மூன்று முக்கிய நிலையுண்டு. அவை முறையே சாக்கு, கிழிதுணி முதலியவற்றை அரைத்துச் செய்யப்படும் ஒரு விதக் கூழ், அக்கூழை வடிகட்டுதல் முதலியன. இரண்டாவதாகச் சொல்லப்பட்ட கூழானது வைக்கோல், பருத்தியாலான வஸ்திரம்போன்ற கிழிதுணிகள், நாருள்ள பண்டங்கள் முதலியவற்றினின்றும் செய்யப்படுவது. அச்சுக்கு அவசியமான காகிதங்கள் பெரும்பாலும் கிழிதுணிகளைச் சேர்த்தே செய்யப்படுகின்றன. அவை பொதி பொதியாகச் சேகரிக்கப்பெற்றுக் காகித இயந்திரசாலையை அடைகின்றன. முதன்முதலாக அவை அழுக்கெடுக்கும் கருவியி னுதவியால் மாசு போக்கப்பட்டுச் சுத்தமாகின்றன. பின்பு அவ்வாடைத்துண்டுகள் சுரசுரப்புள்ள (அரம்போன்ற) சிறு இருப்புக்கம்பிகள் நெருக்கமாக அடியில் பொருந்திய பளுவான பெட்டியை யடைகின்றன. அப்பெட்டியிற் பொருந்தியுள்ள இயந்திரமானது, பட்டு, உரோமத்துணிகள், ஆடைகள் முதலானவற்றைத் தனித்தனியாகப் பிரித்துவிடுகின்றது; பொத்தான், தையல் போன்ற முரட்டு வஸ்துக்களையும் வேறுபடுத்தக்கூடிய சக்தி அந்த இயந்திரத்திற்குண்டு. ஒவ்வொருவித நிறத்துணியும் வெவ்வேறாகப் பொறுக்கப்பட்டுப் பற்பல வர்ண வகைக் காகிதங்கள் செய்ய உபயோகப்படுகின்றன. அவை தனித்தனியே வெவ்வேறு பெட்டிகளிலிடப்படும். அவை இயந்திரத்தை யடையுமுன்னர் மற்றொரு கருவியினால் பொடிப்பொடியாகச் செய்யப்படும். அங்கிருந்து அவை நீராவி இயந்திரத்தை அடையும். அதில் மேற்கூறிய துணிகள் சுத்தப்படுத்தப்பட்டும், அழுக்கு, காகிதமாவதற்கு வேண்டாப்பொருள் முதலியவற்றினின்றும் நீக்கப்பட்டும் கூழாக்கப்படுகின்றன; வெண்மையு மாக்கப்படுகின்றன. அத்துணிகளைச் சலவைசெய்ய ரஸாயன சக்தியை இயந்திரம் கொண்டிருக்கின்றது. கொதிக்கும் நீராவிக் கொப்பரையிலிடப்பெறு மிச் சாமான்கள் பிறிதோர் வழிச் சென்று நன்கு கரைந்து திரவக ரூபத்தை யடையும். ஒருவித அடிக்குஞ் சக்திவாய்ந்த கருவி உபயோகமற்ற பண்டங்களை முரடான காகிதஞ்செய்ய உதவுமாறு பக்குவஞ் செய்கின்றது.

இயந்திரத்தின் மற்றொருபாகத்தில் ஒரு சிறு தீம்பட்டச்சக்கரம் அதிவேகமாகச் சுற்றிக்கொண்டே இருக்கும். வேறோரிடத்தில் கத்திகள் அளவான இடம் விட்டுக் குறுக்குக் கத்திகளுடன் அமைந்திருக்கின்றன. இவற்றினடியில் ஓர் விசாலமான தகடு பொருந்தியிருக்கிறது. அத்தகட்டினடியில்

தண்ணீர் தங்கியிருக்கும். உபயோக மற்ற பண்டங்களும், மற்றவையும் அக் கத்திகளின் வழியாகச் செல்லும்போது அவை நாரு போன்றவற்றைமட்டும் அங்கீகரித்து ஏனையவற்றை விலக்கிவிடுகின்றன ; அவற்றை மெதுப்படுத்தவுஞ் செய்கின்றன ; நன்ருகக் கலந்து பாலைப்போன்ற வெண்ணிறத்தையும் அடையும்படி செய்கின்றன. அவை திரும்பத் திரும்ப இயந்திரத்திலிடப்படுவதால் அவற்றில் கலந்துள்ள அசத்துக்கள் பிரிக்கப்பட்டு நன்னிலை பெறுகின்றன. அடிக்கும் சக்தி பெற்றுள்ள (Beating) கருவியால் சாமான்கள் திடமாகக் கரைந்து பால்போன்ருக, நூற்றுக்கு 90-வீதம் தண்ணீர் கூட்டப்படுகிறது. அடிக்கு மியந்திரத்தினின்றும் பாலொத்த பல சரக்குக்கூழ் நேராகப் பண்டசேகரத்தை (Stuff Chest) யடைந்து காகித இயந்திரத்தின் நனை முனை (Wet End) க்கு மேலாக நிற்கின்றது. அங்கு அப்பண்டம் பூர்ணமாகச் சுத்தப்படும். ஆங்கிருந்து அக் கூழ் ஓர் திறப்பின் வழியோடி, அதன் நிறையை யுணர்த்தி ஒரு துவாரக்கம்பியின் வழியே செல்லுகின்றது. இக்கம்பி முடிவற்றதாயும், செம்பினுலானதாயும், சலனப்படுத்துந் தன்மையதாயும், பிளந்து செல்லக் கூடியதாயு மிருக்கும். கூழ் அக்கம்பியின் வழியாக ஓடுகையில் அதில் கலந்துள்ள தண்ணீர் அக்கம்பியிலுள்ள ஊசிமுனைத்துவாரங்களின் வழியாக வெளிச்செல்லும். இவ்விதமே உள்ளிழுக்கும் சக்தியுள்ள பெட்டியொத்த (Suction Box) என்னுங் கருவி காகிதக் கூழில் கலந்துள்ள நீரைப் பிரித்துவிடும்.

நிற்க, மெலின உருளை யொன்று காகித இயந்திரத்தின் நனைப் பகுதியின் ஓர் பாகமாக இருக்கிறது. அது பித்தளை முலாம் (பூச்சு) பெற்றது. இது முன்கூறிய தாமிரக்கம்பிகள் அமைந்திருக்கும் பாகம் முழுவதும் வியாபித்திருக்கும். இவ்வுருளையின் அச்சானது நேராகப் பள்ளத்தி லமைந்து மேற்கூறிய மெலின உருளை, இயந்திரத்தின் குழாயிலுள்ள இறுகிய கூழிருக்கு மிடத்திற்கு நேராக வந்துபோகக்கூடிய நிலையில் வலுவுடன் பொருந்தியிருக்கும். வெண்காகித நனையேடு (Wet Sheet) கள் அக்கம்பிகளை விட்டு வெளிப்படுவதற்குச் சிறிது முன்பாக அவ்வுருளை அங்குறுகின்றது. இங்குதான் (Water Mark) 'வாட்டர் மார்க்' என்பது ஈரவட்டில் தீட்டப்படும்.

காகிதப்பண்ட சேகரமானது 'பெல்ட்ஸ்' (Felts) என்ற மிருதுவான விரிப்பின்—மேலுங் கீழுமாகப் போகும்போது, ஒரே சமனுகவும், வழவழப்பாகவும், பளபளப்புடன், காடு முரடன்னியில் 'வாட்டர் மார்க்' சுத்தமாகத் தெரியும்படி செய்துவிடுகிறது. இந்த இரண்டாவது 'பிரஸ் ரோலி' (Press Roll) லிருந்து காகிதம் காய மற்றொரு இயந்திரத்தை அடைகிறது. அதற்கு 'டிரையர்ஸ்' (Dryers) என்று பெயர். அது நீராவியால் காய்ச்சப்பட்ட இரும்பு * முஸலக வடிவினதாயிருக்கும்.

இக்காகிதங்கள் இம்முசலகத்தில் சாக்குக்கச்சை (Canvas Belt) களால் மெல்லக் கெட்டியாகப் பிடிக்கப்பட்டு, அங்கிருந்து அதைப்போன்ற மற்றொரு மேல் முசலகத்தை யடைந்து, இவ்விதமாகவே பல குழாய்களைச் சுற்றிச் சுற்றி வருகின்றன. எளிதில் முறிபடக்கூடிய நாராலான நனை காகித ஏடுகள் இவ்வாறு இரண்டு மூன்று முறை சென்று வரக் காய்ந்து நல்ல காகிதமாகின்றது. இதன் மேற்புற வேலை இப்பொழுது முடிவடையும்.

(தொடரும்) S. V. வரதராஜய்யங்கார், சரஸ்வதி நிலையம், உறையூர்.

* Cylinder.

# ஸ்ரீமதி சாரதாமணி தேவியார்.

(88-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவர் அநேக ஆண்டுகள் கழிந்தபின் திரும்பிவந்ததைக்கண்ட தாயாரும், மற்றுமுள்ள உறவின் முறையினரும் கரைகடந்த சந்தோஷத்தில் ஆழ்ந்தார்கள். அதன்மேல் பெண்பிள்ளைகள் ஸ்ரீ இராமகிருஷ்ணரையும் சாரதாமணி தேவியாரையும் உலகாநுபவசுகங்களில் ஆழ்த்திவிட முயற்சித்து அதற்கான ஏற்பாடுகளையும் செய்தார்கள். கலியாணமாகிப் புருஷன் வீட்டிற்குவந்து, சிற்றப்பனுடன் தாய்வீடு சேர்ந்திருந்து, மேற்கூறியபடி வங்காளி 1267-ம் ஆு புருஷன் வீடு வந்தபோது ஒரேதடவைதான் சாரதாமணிதேவி தம்முடைய புருஷனைப் பார்த்தார். அதுகாலை அவருக்கு ஏழு வயதுதான் ஆகியிருந்தது. அதன்பின் அவருக்குப் பதின்மூன்று வயதானபோது அவர் தம் கணவருடைய இல்லத்திற்கு அழைத்து வரப்பட்டார். அவர் அவ்விடத்தில் ஒரே ஒரு மாதகாலம்வரைதான் தங்கியிருந்தார். அப்போது ஸ்ரீ ராமகிருஷ்ணர் தக்ஷிணேஸ்வரத்தில் தங்கியிருந்தபடியால் ஸ்ரீமதி சாரதாமணிதேவி அவரைக் காணக்கூடவில்லை. பின் தாய் வீடு சேர்ந்தார். அதன் பிறகு சுமார் ஆறுமாதங்கழித்து ஸ்ரீமதி தேவியார் திரும்பவும் தம்முடைய கணவனுருடைய சொந்த ஊருக்குவந்து ஆறுவாரகாலம் வரை அவ்விடத்தில் தங்கியிருந்தார். அப்போதும் ஸ்ரீ இராமகிருஷ்ணரைப் பார்க்கக்கூடவில்லை. பின் ஸ்ரீ தேவியார் தம்முடைய பெற்றோர்களுடைய இருப்பிடத்திற்குச் சென்றுவிட்டார். அந்த அம்மையார் சென்ற மூன்றல்லது நான்கு மாதங்கள் கழித்து ஸ்ரீ இராமகிருஷ்ணர் தம்முடைய சொந்த ஊராகிய காமார்புகூருக்கு மேற்கூறியபடி வந்து சேர்ந்தார். இவ்விஷயம் தேவியாருக்குத் தெரிவிக்கப்பட்டது. அவர் கணவர் வீடடைந்தார். அப்போது அவருக்குப் பதின்மூன்று ஆண்டுகளும் ஆறல்லது ஏழுமாதங்களும் ஆகியிருந்தன.

தம்முடைய மனைவியார் வந்து சேர்ந்தவுடன் ஸ்ரீ இராமகிருஷ்ணர் அந்த அம்மையாருக்குக் கல்வி கற்பிக்கவும், அந்த அம்மையாரின் தேக சௌகரியத்தைக் கவனிக்கவும் ஆரம்பித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய குருவான தோதாபூரி என்பார் அவருக்குத் திருமணம் நடந்திருப்பதைத் தெரிந்துகொண்டு "இவருக்குக் கலியாணம் ஆகியிருந்தாலும் தோஷமொன்றுமில்லை; இவர் பிரம்மத்தை உள்ளபடி யறிந்துள்ளார்; மனைவியுடன் இவர் கூடி வாழ்ந்தாலும் இவருடைய நிலைக்கு ஒருவித தோஷமும் ஏற்படாது; பிரம்மவித்தையை இவர் ஒருவர்தாம் உள்ளபடியே அறிந்தவர்; இவர் ஆணையும் பெண்ணையும் எத்தகைய வித்தியாசமு மின்றி ஒரேபடித்தாகக் காணும் நேர்மையுடையார்; ஜனங்களை ஆத்மாவுக்கு நிகராகமதித்து அதற்குத்தக்கபடி நடந்துகொள்ளும் பான்மையுடையார்; ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசங் கற்பிக்கிறவர்கள் பிரமத்தை அடையார்; அதற்கு வெகுதூரத்திலிருப்பவர்களாவர்'' என்று அவர் விஷயத்தில் அபிப்பிராயங் கொண்டார்.

தம்முடைய குரு கொண்டிருந்த அபிப்பிராயத்தின்படியே ஸ்ரீ ராமகிருஷ்ணர் காரியங்களை நடத்தலானார். அவர் தம்முடைய கடமைகளை அரைமனதுடன் செய்யாமல் முழுமனதுடன் செய்துவந்தார். தம்முடைய மனைவிக்குக் கல்வி கற்பிக்க வாரம்பித்த ஸ்ரீ ராமகிருஷ்ணர், அந்த அம்மையாருக்குக் கடவுள்பக்தி, குருபக்தி ஆகிய இவைகளைப்பற்றியும், விருந்தினர்களை உபசரிக்கவேண்டிய முறைகளைப்பற்றியும், வீட்டுவேலைகளைக் கவனிக்க

வேண்டிய தன் அவசியத்தைப்பற்றியும், பணத்தைச் செட்டாய்ச் செலவு செய்யவேண்டிய தன் முறைகளைப்பற்றியும், விரிவான நீதிகளை எடுத்தோதி; அவர் எல்லா நற்காரியங்களிலும் திறமைசாலியாகச் செய்துவிட்டார். பின்னும் எப்போதும் கடவுளிடத்தில் இடையரூத அன்புபூண்டொழுகவேண்டுமென்றும், எத்தகையோரிடத்திலும் எத்தகைய செல்வம் வந்துற்றகாலையிலும் அடக்கத்தோடு நடந்துகொள்ளவேண்டுமென்றும் அந்த அம்மையாருக்கு எடுத்துக்கூறி அவை பசுமரத்தாணியைப்போன்று அவ்வம்மையாரின் மனதில் பதியும்படியும் செய்துவிட்டனர்.

ஸ்ரீமதி தேவியார் பதினன்காவது வயதில் மேற்கூறியபடி தம்முடைய கணவனுரிடத்தில் கல்வி கற்க ஆரம்பித்தார். அவர் ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய அன்பையும், ஆதரவையும் அநுபவித்து அவருடன் வசிப்பதைப் பெரும்பேருகக் கருதினுர். இதை ஸ்ரீ தேவியார் பிற்காலத்தில் தம்முடைய கணவனுருடைய சிஷ்யைகளுக்கு எடுத்துக் கூறியுள்ளார். "என்னுடைய கணவனுர் எனக்குப் புத்திமதிகள் போதித்ததிலிருந்து என்னுடைய இருதயத்தில் ஞானம் நிறைந்த ஒரு குடத்தை வைத்துவிட்டாதாக எனக்கு உணர்வு ஏற்பட்டிருந்தது ; என்னுடைய மனதிடை ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியையும் சாந்தத்தையும் அளவிட்டுரைத்தல் முடியாது" என்று அவர் அடிக்கடி சொல்லுவது வழக்கம்.

சிலமாதங்கள் கழித்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் தக்ஷிணேஸ்வரத்திற்குச் சென்றுவிட்டார். ஸ்ரீ சாரதாமணிதேவியார் பேரானந்தத்தை அடைந்துவிட்டதாக எண்ணித் தம்முடைய பெற்றோர்கள் வீட்டிற்குச் சென்றுவிட்டார். தம்முடைய கணவனுர் தம்மைவிட்டு தக்ஷிணேஸ்வரத்திற்குச் சென்றுவிட்டதற்காக மனவருத்தங்கொள்ளாமல் அமைதியாகவும் தன்னலமற்றும் இருந்து வந்தார்.

(தொடரும்) A. துரை.

## பூர்வகால நாடகங்கள்.

(12-ம் தொகுதி 572-ம் பக்கத்தொடர்ச்சி)

நிருத்தியம் கானத்தை ஆதாரமாக உடையது. அதற்குத் தாளமே பிரதானமானது. நிருத்யமென்பது தாள—ஜெதிகளைக் கணக்கிட்டுத் தாள மாத்திரைகளுக்கு நேர்பட ஆடுதலாம். "கீதம், வாத்தியம், நிருத்தியம் ஆகிய மூன்றும், மூன்று மதயானைகளெனவும், தாளம் அந்த மதயானைகளையடக்கும் அங்குசமெனவும், தாள ஜெதி—மாத்திரைகள் யானைகளை அடிக்கும் அடியெனவும்" காத்யாயனர் கூறுகின்ருர். இதனின்றும் நிருத்தியத்திற்குத் தாளம் தாய்போன்றதென உணரலாம். பண்டைக்கால நாடகங்களில் அறிஞர், இந்திரசபை, தேவசபை, இராஜசபைபோன்ற அங்கங்களில் நிருத்தியத்தை முக்கியமாக அனுசரித்து வந்தனர். நாடகங்களில் மாதர்களும் வேடந்தரிப்பது புராதனமான வழக்கம். 'நடி' என்ற பெண்பாற் பிரயோகம் பாணினி, பதஞ்சலி முதலிய இலக்கிய விர்ப்பன்னர்களின் காலத்திற்கு முற்பட்ட கிரந்தங்களிற் காணப்படுவதே இதற்காதாரமாம். ஸ்திரீகளே லயவாத்யத்தை யனுசரித்து நடனமாடுவது முற்கால நாடகவியலில் அதிகமென்றும், காலில் கஜ்ஜை (சதங்கை) பூண்டு அவர்கள் நிருத்திய மியற்றினரென

வும் மார்க்கமூலர் குறிப்பிட்டார். நடனமாதர்கள் ரிக்வேதத்தில் உதயகாலத்திற் கொப்பிட்டுக் கூறப்பட்டுள்ளார்கள்.

பொதுவில் நிருத்தியமென்பது நாடகத்திற் சம்பந்தப்பட்ட அனைவராலும் புரியப்படும் அங்கமென்றேற்படும். ஸ்திரீவேடந் தரித்தவர் மேடையிற் றோன்றுங்கால் பெண்ணேயென நடித்து அதிரநடத்தல், சிதறப்பேசல், பின்புறங்காட்டல் முதலியன இலராகி, தாம் பூண்டது வேடமென்றெண்ணுது, தாமே அச்சரித்திரத்திற் றோன்றுவதாக அனுபவித்து நடிக்கவேண்டும். தலையை அதிகம் நிமிராது, அன்னமென நடந்து, கிளி போன்று கொஞ்சிப்பேசி, குயில்போன்று குளிரப்பாடி, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய நான்கையு முடையராகி ஆனந்த முறவேண்டிய இடத்தில் சந்தோஷக் குறிப்பையும், துக்கப்படவேண்டிய சந்தர்ப்பத்தில் துயருடன் கண்ணீரைப்பெருக்கியும் நடித்தலே யவர்களுடைய இலக்கணமாம்.

பெரியோர் நாடகத்தைச் சிருங்காரரச மென்றும், சோகரஸமென்றும் இருவகையாகப் பிரித்தனர். சிருங்கார ரஸத்தில் சல்லாப உல்லாசங்கள், காதல் நிகழ்ச்சிகள், மன்றலின் சிறப்பு, பிரிந்தவர் கூடல் முதலியனவும், சோகரஸத்தில் பிரலாபம், காதலற்ற சம்பவங்கள், மணத்தடை, காதலர் பிரிவு முதலியனவும் நிகழும். நடிகர் தங்களின் திறமையால் காண்போர் மனம் லயிக்க, நாடகத்தி லீடுபட்டு, சிருங்கார ரஸம் பொருந்திய இடங்களில் ஆனந்தபாவ்பத்தையும், சோகத்திற் கண்ணீர்ப் பெருக்கையும் அடைவர். சிருங்கார சோக ரஸ பாகங்களில், நீதி ரஸமும் பக்திரசமும் பரிமளித்திருந்தன. சிருங்கார ரஸத்திலேயே நிருத்தியம் பெரிதும் கொள்ளப்பட்டதென்பதும், வீணை, தம்பராபோன்ற தந்திவாத்யங்களே நிருத்திய இயலுக்கு ஏற்றனவாக ஏற்கப்பட்டனவென்பதும் மார்க்க மூலர் குறிப்பிடுகின்றார்.

பூர்வகால நாடகங்களில் நாடகம் தொடங்குவதற்குமுன் தோத்திரப் பாடல்கள் பாடுவது வழக்கம். அதன்பின் விதூஷகன், விதூஷகி என்பார் தோன்றி அன்று நடைபெற விருக்கும் சரித்திரத்தின் சாராம்சத்தை அவ்விருவரும் சம்பாஷிப்பதின் வாயிலாக எல்லோருக்கும் அறிவித்து, விக்னேஸ்வர பூஜை முதலியனவியற்றிச் சென்றபின்பு நாடகம் தொடங்கும். இவ்விதூஷக வேடங்கள் முற்கால நாடகங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவர்கள் நாடகங்களில் அடிக்கடி தோன்றி, விடா நகைப்புண்டாகுமாறு சம்பாஷித்து அனைவரையும் மகிழ்விக்கும் இலக்கணமுடையவர். வேடதாரிகள் வேடம் மாற்றவோ, ஆஸ்வாசத்திற்காகவோ மறையும்போது விதூஷகர் தோன்றுவர். நிருத்திய விஷயம் இதுவரை கூறப்பட்டது.

இனி, அபிநயத்தைப் பற்றிச் சிறிது புகலுவோம்: கானம், நிருத்தியம், வசனமாகிய மூன்றையும் அபிநயமே தொடுத்து நிற்கின்றது. உடல்வளைய கரங்களால் பாடி யாடிப் பேசுவதின் பொருளை விளக்கலே அபிநயமெனப்படும். கானத்தில் விசேடஞான மில்லாதவரும் அபிநயத்தால் நாடகத்தைப் பரிமளிக்கச் செய்யலாம். அபிநயத்துடன் கூடிய கானமும், நிருத்யமுமே சிலாக்கியமானது. சுருங்கச் சொல்லின் அபிநயமற்ற நாடகம் நாணிழந்த நங்கையை யொக்குமெனலாம்.

பிறகு வசனத்தைக் கூறுமிடத்து வசனம் நாடகத்தில் மாறிமாறிக் கலந்து கானத்தினிடையே புகுந்து வருமியல்புடையது. பாட்டின் பொருளை யுணர்த்தவும் பாட்டு அவசியமில்லாத இடங்களில் சம்பாஷிக்கவும் வசனம் அவசியமாகின்றது. இவ்வசனபாகம் மிகக் கடினமான சொற்களால் பொருந்தியிருத்தலாகாது. இயற்கை மணங்கமழ அமைந்திருக்கவேண்டும். சொற்

சோர்வு, பொருட்சோர்வு முதலியன இல்லாமல் சிலேடைப் பொருளுடைய தாக வசனபாகம் அமைந்திருத்தல் முக்கியம். கூறியது கூறலும், ஒரே சொல் பன்முறை உபயோகப்படலுமாகா. காதற் சம்பவங்களில் அளவுக்கு மிஞ்சி, சபையில் பகிர் முகமாகக் கூறத்தக்க அளவைத் தாண்டிக் காதல் வசனங்களை உபயோகித்தல் பெரிதும் கண்டிக்கப்படும்.

இன்னும் வடமொழிக் கிரந்தங்களிற் காணப்படும் சில ஆதாரங்களைக் கொண்டு பொதுவில் நாடகலக்ஷணத்தைச் சிறிது விளக்கலாம்: நாடகம் தெற்கைத் தவிர மற்ற திசைகளை நோக்கியாடற் குரியதென்று நாடகலக்ஷண நூல் கூறுகின்றது. வடக்கு, கிழக்குத் திக்குகளை நோக்கியாடல் உத்தமம். மேற்கு முகமாக ஆடல் மத்திமம். வசந்த ருதுவில் மேற்கு நோக்கி, பாரத பிரகலாத சரித்திரங்களும், கிரீஷ்ம, வருஷ, சரத், சசி ருதுக்களில் வடக்கு கிழக்கு முகமாக ஹரிச்சந்திர நாடகமும் ஆடலாம். ஹேமந்தருதுவில் பீடா பரிகாரத்திற்காகவும், வருஷ ருதுவில் வானம் வரையாது பெய்யவும் இராமா யண முதலான நாடகங்களை ஆரியர்கள் நடாத்தி வந்தனர்.

புண்ய புராண சரித்திரங்களே முற்காலத்தில் நடிக்கப்பெற்று வந்தன. கதாநாயக நாயகி வேடதாரிகள் நாடகத்தன்று நியமந்தவறாது ஸ்நானஞ் செய்து ஒரு வேளையுண்டு, இரவு பால் மட்டுங்கொண்டு ஒழுகவேண்டும்; ஏனையோரும் விரதமனுஷ்டிக்கவேண்டும்; வேடந்தரிக்கு முன்பு க்ஷவரஞ் செய்துகொண்டு நீராடி 'அரிதாரம்' பூசி அங்கிகளை யணிந்து மேடையிற் றோன்றுதல் முறை. சரித்திர சந்தர்ப்பத்திற்கேற்றவாறு மேடையில் அரண் மனை, வனம் முதலியவற்றை இயற்கையாலமைந்தன போன்று தயாரிப் பதும், வெண்மையான திரையிட்டு அலங்கரிப்பதும் புராதன வழக்கமாம். மேற்கூறிய நாடகாலங்காரங்களைக் கொண்டு பூர்வகாலத்திருந்தே பதுமை நாடகங்கள் பாரதநாட்டில் நடைபெற்றன வென்பது புலனாகின்றது. வட மொழிநூல்களிற் கிடைத்த சில ஆதாரங்களைச் சுருக்கிக்காட்டி ஆரியர் வட நாட்டிலியற்றிவந்த நாடகங்களைப்பற்றி இதுவரையிற் கூறினோம்.

(தொடரும்) குக்குடநகர், ஆத்மநாதன்.



## பசுவின் சாணம்.

பசுவின் சாணத்தின் இரகசியங்களை உணராதவர்களும், மேல் நாட்டு முறைகளை மேன்மையாய்க் கொண்டாடுகிறவர்களுமாகிய சிலர் அதைப்பற்றிக் குறை கூறுகின்றார்கள். அதற்குக் காரணம் நம்நாட்டு வழக் கங்களின் உண்மையை யுணராத குறைவே என்று சொல்லலாம். 26-8-27-ல் சென்னை பிரம்ம சமாஜ மந்திரத்தில், 'சமுதாய சீர் திருத்தம்' என்னும் விஷ யத்தை, திருவாளர், கா. நமசிவாயமுதலியார் அவர்கள் விமரிசையாகப் பேசி னார்கள். அதில் மேல் நாட்டின் முன்னேற்ற ஊக்கத்தையும், கீழ் நாட்டு நம் மவர்களின் ஊக்கக் குறைவையும் எடுத்துக் காட்டி, நம்மவர் பழைய கீழ்மைக்

கும் கீழ்மையாய்ப் போகக்கூடியதற்குக் காரணம் ஜாதிவித்தியாசமும், ஆலய சீர்திருத்தங்களும், விவாகச் சடங்குகளும், பெற்ருேர்களால் நடத்திவரும் விவாக விஷயங்களுமே யென்றும், நம்மவர் முன்னேற்ற மடையவேண்டு மாஞல், அவை ஒழியவேண்டும் என்றும், தற்காலத்தில் விதவா விவாகம் அவசியமாயிருந்தாலும் அதற்குமுன் செய்யவேண்டிய திருத்தங்கள் பல இருக்கின்றன வென்றும், அவற்றை முன் செய்யவேண்டுவது அவசியமென் றும், ருஷியாதேசத்தில் கருப்பச் சின்னம் செய்ய ஆஸ்பத்திரிகளும், பிரான்சு தேசத்தில் குழந்தை பிறந்தால் 50 ரூபாய் கொடுப்பதான ஏற்பாடும் அமைந் திருக்கின்றன வென்றும், இவ்விடத்திலும் எலக்டிரிக் சிகிச்சை யொன்று ஏற்பட்டிருக்கிறதென்றும், அதன் மூலம் கருப்பப்பை இருக்குமிடத்தில் எலக்டிரிசிடி காண்பிப்பதால் 3 வருஷபரியந்தம் கருப்பம் தரியாதென்றும், இப்படி 3 வருஷங்களுக் கொருமுறை செய்தால் கருப்பமே தரியாதென்றும் சொல்லி, தேசங்களுக் கேற்றபடி ஜன சமுதாயம் அதிகரித்த இடத்தில் குழந்தைகள் வேண்டாமென்றும் ஜன சமுதாயம் குறைந்துள்ள இடத்தில் குழந்தைகள் விருத்தியடைய வேண்டுமென்றும் ஆங்காங்குள்ளவர்கள் பிரயத் தனப்படுவதாயும் தெரிவித்தார்கள். இவை தவிர நம் தேசத்தில் பண்டைய காலத்தில் விதவா விவாகம் இருந்ததாகவும், பெண்கள் புருஷர்களை விரும் பாதபோது அவர்களை மருந்து முதலிய பல வகைகளால் கொன்று, தமக் கிஷ்டமான புருஷனை விவாகம் செய்யும் முறை அதிகரித்ததால் பின்னர் விதவைகள் விவாகம் செய்து கொள்ளக்கூடாது என்ற விதி ஏற்பட்டது என்றும், அத்தகைய காரியங்கள் நிகழாவண்ணம் தடுப்பதற்கு மேல் நாட் டாரைப்போல் நாமும் காதலித்தபின்பே கலியாணம் செய்யவேண்டும்; கலி யாணம் செய்துகொண்டு காதலித்தல் தகுதியற்றதாகும் என்றும் கூறிஞர் கள். மேலும் யுக்தவயது வந்தபிறகு விவாகம் செய்துகொள்ளுதலே நலம் என் றும் சொன்ஞர்கள். இவர்கள் சொல்லிய விஷயங்களை வாசிக்கும் நீங்களே கவனிக்குமாறு விட்டு விடுகின்றேன். ஆஞல் மகம்மதியர்களில் விதவா விவாகம் நடக்கின்றது; அவர்கள் கலியாணம் செய்தபிறகே காதலிக்கின்ருர் கள். சரித்திர பூர்வமாகவாவது அனுபவ பூர்வமாகவாவது இவ்வகுப்புப் பெண்களால் புருஷர்கள் மரணமடைந்தார்கள் என்பதற்கு நமது முதலியா ரவர்கள் ஆதாரங்காட்டுவார்களா?

இன்னும் அன்று கூடிய கூட்டத்தில் தலைமைவகித்த திருவாளர். மாணிக்க நாய்க்கர் அவர்கள் பேசிய காலத்து நம் நாட்டில் பசுக்கள் பால், தயிர், மோர், நெய் இவைகளைக் கொடுப்பதால் அவற்றைத் தெய்வமாக முற் காலத்தில் உள்ளவர்கள் கொண்டாடிஞர்கள் என்றும், அவற்றின் மலத்தை யும், நீரையும் வீடுகளில் மெழுகுவதும், தயிருடன் கலந்து பஞ்சகவ்வியமென உட்கொள்வதும் எவ்வளவு ஆபாஸம் பாருங்கள் என்றும், சைன்சின்படி சாணத்தில் புழுக்கள் அதிகரித்துத் துர் நாற்றமும் வீசி வியாதிகள் சம்பவிக் கின்றன வென்றும் சொன்ஞர்கள். இது முக்கியமான விஷயமாதலால் இதைப்பற்றிச் சிலவற்றைக் கூறவேண்டியது அவசியமாயிருக்கின்றது.

*

ஆனால் இவர்கள்பால் தோஷம் கூற நான் முன்வரவில்லை. இவர்களுக்குச் சாணத்தின் பெருமை இன்னதென்பதையும், முன்னோர்கள் அது மலம் என்பதை உணராதவர்களல்லர் என்பதையும் விளக்குவான் வேண்டியே நான் இவ்வியாசம் வரையத் துணிந்தேன்.

நம்தேசத்தில் சாப்பிட்ட விடங்களிலும், எச்சில் உமிழ்ந்த இடங்களிலும் சாணம் போடுவது வழக்கம். காலை $4\frac{1}{2}$ மணிக்கு வீதியில் சாணத்தை ஜலத்துடன் கலந்து தெளிப்பதும் தவிர அசுத்தமான இடங்களிலும் சாணம் கொட்டுவது வழக்கம். இவற்றின் காரணங்களை விசாரிப்பின் இதன் இரகசியங்கள் நன்கு விளங்கும்.

மேல் நாட்டார், காலையில் 3 மணிக்குப் பூமியில் ஒருவித விஷப் பூச்சிகள் உற்பத்தியாகிச் சூரிய ரஸ்மி பட்டவுடன் அவைகள் யாவும் மரணமடைகின்றன வென்றும், மனித சரீரத்தில் அக்கிருமிகள் பட்டால் வியாதியை உண்டுபண்ணும் என்றும், அத்தகைய கிருமிகள் சரீரத்தில் அணுகாமல் அவற்றைத் தடுப்பதற்காகவே நித்திரையிலும் பூட்சு போட்டுக்கொள்ளப்படுகிறதென்றும் சொல்லுகிறார்கள். அக்கிருமிகளைத் தடுப்பதற்குக் காலில் மாத்திரம் ஏதோ ஒன்றை அணிந்துகொள்வதைக்காட்டினும் அக்கிருமிகள் உண்டாகும் காலத்தில் (அதாவது காலை 3-மணி முதல் 4-மணி வரையில்) அக்கிருமிகளைக் கொல்லக்கூடிய சாணத்தை வீட்டின் வாசற்படியிலிருந்து வீதியில் கூடுமான வரையில் ஜலத்துடன் கலந்து தெளிக்கும்படி நம்முன்னோர்கள் விதி ஏற்படுத்தி அப்படித் தெளித்தால் கிருமிகள் நாசமடையும் என்றும், வீட்டிற்குள் மேற்படி கிருமிகள் பிரவேசிக்க இடமிராது என்றும் கூறியுள்ளார்கள்.

பசுவின் சாணத்தை எச்சில்பட்ட இடங்களில் தெளிக்கும்படி முன்னோர் கூறியவாறு அதைத் தெளிப்பதால் எச்சிலிலுள்ள கிருமிகள் நாசமடைகின்றன. சிறிதைப் பெரிதாகக் காட்டும் கண்ணாடிக் கருவியால் பார்க்கின் இதன் உண்மை விளங்கும்.

எச்சில்பட்ட பாத்திரங்களையும் சாணம்போட்டுச் சுத்திகரிக்கவேண்டுமென்னும் விதியேற்பட்டிருப்பதும் கிருமிகளை நாசம் செய்யும்படி ஏற்பட்ட உபாயமேயொழிய வேறன்று.

நாய்க்கரவர்கள் கூறியபடி சாணத்திலும் கிருமிகள் உண்டாகின்றனவேயென்று சிலர் கேட்கலாம். அவ்வாறுண்டாவது உண்மைதான். ஆனால் அவ்வாறு சாணத்தில் உண்டாகும் கிருமிகள் கெடுதல் செய்யக்கூடியனவல்ல.

விருக்ஷங்கள் எப்படி நம்மிடத்திலிருந்து உண்டாகும் விஷவாயுவை உட்கொண்டு, தம்மிடத்திலிருந்து வெளிப்படும் விஷவாயுவால் நமக்கு யாதொரு கெடுதலும் செய்யாமல் நன்மையையே செய்கின்றனவோ அதுபோல் சாணமும் தன்னிடத்தி லுண்டாகும் கிருமிகளால் நமக்குக் கெடுதலுண்டாக்காமல் நம்மிடத்திலிருந்து உண்டாகும் எச்சில் முதலியவைகளிடத்திலுள்ள கிருமிகளைக் கொன்றுவிடுகின்றன.

இதுவரையில் பூலோகத்தில் எந்த மதஸ்தர்களும், எந்தத்தேசத்தவர் களும் நம் தேசத்தில் வழங்கும் (டிஸ்இன்பெக்டெண்ட்) விஷத்தைப் பாவ வொட்டாதுதடுத்தல் என்பதற்குரிய சாணத்திற்குச் சமமான ஔடதத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்கள் என்று சொல்லுதல் முடியாது; ஏனெனில்,

தற்காலத்தில் எங்கும் பாவி உயிர்களைக் கொள்ளைகொள்ளும் வியாதியாகிய க்ஷயம் (கன்சம்ப்ஷன்) என்னும் மேகசுரம் கண்டவர்களின் கோழை, எச்சில் இவைகளிலிருந்து பரவும் கிருமிகள் பொல்லாதவையென்றும், அத்தகைய கோழைகளை லைசால் என்னும் திராவகத்தில் போட்டுப் பூமியில் புதைக்கவேண்டுமென்றும் மேல்நாட்டு வைத்திய நிபுணர்கள் சொல்லுகிறார்கள். அவ்வாறு சொல்வதோடு அவர்களே மேற்படி கிருமிகள் லைசால் முதலிய லோஷன்களால் மரணமடைவதில்லையென்றும், அக்கிருமிகள் பாவி அநேகருக்கு க்ஷயம் சம்பவிப்பதாயும் சொல்லுகின்றார்கள். மேற்படி கோழையைப் பசுவின் சாணத்தில் போட்டால் அத்தகைய சகல கிருமிகளும் உடனே மரணமடைகின்றன. சிறிதைப் பெரிதாகக்காட்டும் கண்ணாடிக் கருவியால் பார்த்துச் சகலரும் இவ்வுண்மையை உணரலாம். இந்தக் கருத்தைக்கொண்டே வியாதியஸ்தர்களின் எச்சில்பட்ட இடங்களில் தண்ணீர்விட்டு அலம்பாவிட்டாலும் அலம்பினாலும் சாணம் போடுதல் வேண்டும்; இல்லையேல் சுத்தமில்லை என்று பெரியோர் கூறியிருக்கின்றார்கள். இத்தகைய குணங்கள் பசுவின் சாணத்தி லிருப்பதினாலேயே நம் பெரியார் சாணத்தை உயர்வாகக் கொண்டாடுகின்றார்களே யொழிய வேறுகாரணத்தால் கொண்டாடவில்லை.

பசுவின் சாணம் இக்காலத்து நம்மவர்களில் நாய்க்கரவர்கள் போன்ற சிலருக்கு மாட்டு மலம் என்று தோன்றுவதுபோல் அக்காலத்தவர்களாகிய நம் பெரியோர்களுக்கும் தெரியாமலில்லை. அவ்வாறு தெரிந்திருந்தும் அதில் மேற்கூறிய உயர்குணங்கள் அமைந்திருப்பதனாலேயே அவர்கள் அதைக் கொண்டாடினார்கள். எப்படிப் புனுகுபூனையின் மலம் அப்பூனைக்கு நிஷேதமாயிருந்தாலும் நமக்கு வாசனை வஸ்துவாக மாறுகின்றதோ அதுபோன்று சாணமும் மாட்டுக்கு மலமானாலும் குணத்தால் நமக்குச் சிரேஷ்டமாகின்றது.

இன்னும் இதைப்பற்றி விரிவாக எழுத இஷ்டமிருந்தும் விரிவஞ்சி இம்மட்டோடு நிறுத்திக்கொண்டேன். இவ்வியாசத்தைக் கண்ணுறுவோர்களில் நமது திருவாளர்-மாணிக்கநாய்க்க ரவர்களைப்போன்ற அபிப்பிராயங்கொண்டவர்கள் யாவரும், சாணத்தின் பெருமையை உணரவேண்டுமாயின் (மைக்ராஸ்கோப்) என்னும் கருவியின்மூலம் மேற்சொன்னவாறு பரிசோதனை செய்து உண்மையை உணர்ந்து தங்கள் மனதிலுள்ள அபிப்பிராயங்களை மாற்றிக்கொள்வதுடன் சகலர்க்கும் சாணத்தின் பெருமையைத் தெளிவுறச் சொல்லிச் சிலர் கைநழுவ விட்டுவிட்ட சாணம்தெளித்தலாகிய பழக்கத்தை மீண்டும் மேற்கொள்ளுமாறு பிரயத்தனம் செய்யும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன்.

டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.

# விசூவியஸ் எரிமலையின் சரித்திரம்

(85-ம் பக்கத் தொடர்ச்சி.)

இந்தருணத்தில் பூமி ஊசலாடத் தலைப்பட்டது. இத்துடன் வீட்டுச் சுவர்கள் முதலியன ஒன்றுக்கொன்று உராய்ந்துகொண்டு ஆடின. அப்போது அவர்களுக்கு வீட்டிற்குள்ளேயே இருப்பது நல்லதா அல்லது வீடு முதலியன இல்லாத வெட்டவெளியில் போய்நிற்பது நல்லதாவென்னும் யோசனை யுண்டாயிற்று. அவ்வாறு யோசித்ததில் அவர்களுக்குத் தெளிவாக ஒன்றும் புலப்படவில்லை. "வீடு எங்கே நொறுங்குண்டு விழுந்து ஒரே அமுக்காய் எல்லோரையும் அமுக்கிவிடுமோ" என்ற பயம் அவர்களுக்குள் வெகுவாய் இருந்தது. ஆனாலும் அவர்கள் வெட்ட வெளியில் போய் நிற்கவும் தைரியம் கொண்டார்களில்லை. மலையிலிருந்து வந்து விழும் அக்கினி வருஷத்திற்குப் பயந்தே அப்படிச்செய்ய அவர்கள் துணியவில்லை. ஆயினும் வீட்டிலிருப்பதைக் காட்டிலும் வெளியே போய்விடுவதே அனுகூலமென்பது பிறகு அவர்களுக்குத் தோன்றிற்று; பின்னர் எல்லோரும் அவ்விடத்தைவிட்டு அகன்று சமீபத்தில் உள்ள ஒரு வெளியில் போய் நின்றார்கள். ப்ளினியைத் தவிர மற்ற எல்லோரும் பயத்தாலே வெளியே ஓடிவந்தார்கள். ஆனால் ப்ளினியோ, வெளியே வந்தால் எரிமலையின் காரியங்களையும், அதிலிருந்து மழைபோல தாரை தாரையாக வெளிப்படும் அக்கினித்துண்டுகள் முதலியவற்றின் குணங்களையும் பரிசோதித்து அறிந்து கொள்ளலாமென் றெண்ணியே வெளியில் வந்தார். இவர்கள் வெளியே போகும்போது தலையில் கற்றுண்டு முதலியவை விழுந்து தகர்க்காமல் தலையணை திண்டு மெத்தை முதலானவைகளைத் தலையில் வைத்துக் கட்டிக் கொண்டு போனார்கள். இவைகளைத் தவிர அவர்கள் தலைகளைக் காக்க வேறு மறைப்பில்லை. பஞ்சுக்கும் நெருப்பிற்கும் இருக்கும் உறவை யோசிக்கில் இந்த ஆதாரமும் என்ன ஆதாரமாகும்! இவர்கள் செய்த தந்திரச் செயல், ஒருவன் மண் குதிரையை நம்பி ஆற்றைக் கடக்க எத்தனித்ததை யொக்கும். அப்போது பொழுது விடிந்து அருணோதயமாய் மற்ற விடங்களெல்லாம் பிரகாசமாய் இருந்தன. இவ்விடத்திலோ அதிக இருள்மூடி இருந்தது. அந்நிலைமை கதிரவனும் இக்கடூரமான அக்கினி உக்கிரத்தையும், அதினால் மதிமயங்கித் தவிக்கும் ஜனங்களையும் பார்க்கச் சகியாது மறைந்திருக்கின்றனனோ என்று கருதுவதற்கிடமாயிருந்தது. இவ்வாறு தப்பிப் பிழைக்க வகையில்லாமல் அவர்கள் அவதிப்படுகையில், கடலோரம்சென்று படகேறிப் பாய்விரித்து நடுக்கடலிற்போய் நிற்கலாமா என்ற ஓர் எண்ணம் அவர்களுக்குள் உண்டாகியது. அப்படியே அவர்கள் கடற்புறம் சென்றார்கள். கடலோ கொந்தளித்துப் பெரிய அலைகளுடன் அதிக உயரம் கிளம்பிக் கரையை மோதிக்கொண்டிருந்தபடியால் அவர்கள் கிட்ட அணுக இயலாததாயிருந்தது. அவர்கள் தாங்கள்பட்ட அவதியினால் மிகக் களைப்படைந்தவர்களாய் அவ்விடத்தில் தரையில் துணியைவிரித்து உட்கார்ந்தார்கள். உட்

கார்ந்ததும் கொஞ்சநேரத்துக்குள் அவ்விடத்தில் கந்தகம் முதலியன கலந்த தான ஒருவிதப் புகைசூழ்ந்து அக்கினிக்காற்று வீசியது. அவ்விடத்தில் இருந்தவர்களெல்லாம் இக்கஷ்டத்தைப் பொறுக்கமுடியாமல் நாலாபக்கமும் சிதறி ஓடிப்போனார்கள். ப்ளினி எழுந்திருக்க முயன்றார். அவ்வாறு முயன்று சிநேகிதாது உதவியால் எழுந்திருந்தவுடனே கீழே விழுந்து இறந்து விட்டார். இவருக்குச் சுபாவமாய் அடிக்கடி மூச்சு அடைத்துக்கொள்ளும் ஓர் வியாதி உண்டு. அப்போது வீசிய கந்தகக் காற்றாலோ, அல்லது அதைப் போன்று வீசிய விஷ சம்பந்தமான காற்றாலோ அவர் உடனே மூச்சுத் திணறி உயிரைவிட்டிருப்பாரென்பது விளங்குகிறது. இக்கேடு சம்பவித்த மூன்று நாள்வரையில் அந்தகாரம் நீங்கவில்லை. பிற்பாடு வெளிச்சம் உண்டாயிற்று. அப்போது அவர் தேகத்தைப் பார்த்ததில் அது காயம் முதலிய எவ்வித பின்னங்களுமில்லாமல், முதலில் விழும்போது எப்படி இருந்ததோ அதே மாதிரி இருந்தது. உறங்குபவர் தேகம்போலத் தோற்றியதே யொழிய உயிரொழிந்து மாண்டவர் தேகம்போலக் காணப்படவில்லை. இவ்வாறு அவர் அவ்விடத்தில் மாண்டுகிடக்க, மைஸீனத்தில் என்ன நடந்த தென்பதைச் சற்று கவனிப்போம்: பெரிய ப்ளினியானவர் மலையை நோக்கிப் பிரயாணமாய்ப் போகையில் சிறிய ப்ளினியும் அவர் தாயாராகிய பெரிய ப்ளினியின் சகோதரியும் வீட்டில் இருந்தார்கள். அன்று இரவு போஜனமான பிற்பாடு சிறிய ப்ளினி சற்றே ஏதோ வேலையாயிருந்து விட்டுப் படுக்கைக்குப் போனார்.

ஆனால் அவருக்குக் கொஞ்சமேனும் தூக்கம் வரவில்லை. கொஞ்சக் காலமாக அவ்விடத்தில் பூமி நடுங்கிக்கொண்டே யிருந்தது. இருந்தும் அவ்விடத்தில் பூகம்பம் அடிக்கடி உண்டாவது வழக்கமாதலால், அவ்விடத்து ஜனங்கள் அதைச் சாதாரணமாக வழக்கமாய் உண்டாவதைப்போல நினைத்து அச்சமற்றிருந்தார்கள். ஆயினும் அந்த அதிர்ச்சியானது, வழக்கமாய் இருப்பதுபோல இராமல் சற்றுநேரத்துக்குள் பூமியானது அதிகமாய் ஊசலாட ஆரம்பித்தது. கொஞ்சநேரத்தில் வீடுகளெல்லாம் பூமி ஆடும் ஆட்டத்தால் சரிந்து விழுந்து நொறுங்குண்டு நாசமாய் விடுமென்பது தோன்றியது. இந்த அபாயத்தை அறிந்து, சிறிய ப்ளினியும், அவர் தாயாரும், பொழுது விடியு முன்னமே கடற்கரை யோரமாயுள்ள ஒரு திறந்த வெளியில் வந்து சேர்ந்தார்கள். பொழுது விடிந்ததும் கதிரோன் ஒளியில்லாமல் கார்மேகம் கவிந்ததை யொப்ப எங்கும் சற்றே இருளாயிருந்தது. அவர்களைச் சுற்றிலும் இருந்த வீடுகளெல்லாம் ஊசலாடிக்கொண் டிருந்தன. ஆதலால் இவ்வெளியில் நின்றாலும் ஏதாவது அபாயம் நேரிடக்கூடுமென்று நினைத்து ப்ளினியும் அவர் தாயாரும் அவ்வூரை விட்டு வெளியேறி அபாயமில்லாத இடத்திற்குப் போகலாமென்று புறப்பட்டார்கள். இவ்வாறு அந்த ஊரில் மிகவும் முக்கியமானவர்களும், புத்திமான்களுமாகிய இவர்கள் புறப்படவே, செய்வதொன்றுந் தோன்றாமல் தியங்கித் தடுமாறி நின்றுகொண் டிருந்த மற்ற ஜனங்கள் எல்லோரும் ஒருவர் பின் ஒருவராக இவர்களைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள்.

இவர்களிருவரையும் சுற்றி நாற்புறத்திலும் ஜனங்கள் திரள் திரளாய்க் கூடிக் கொண்டபடியால் கொஞ்சதூரங்கூட இவர்களால் செல்லமுடியவில்லை. மேலும் வெளிப்புறங்களிலும் பூகம்பம் அதிகரித்து வந்தபடியால் அவ்விடங் களிலும் அதிக அபாயம் இருக்குமென்பது இவர்களுக்குத் தோன்றிற்று. இவர்களுடைய கட்டளையால் கொண்டுவரப்பட்ட வண்டிகள் சம நிலத்தில் கூட நின்றவிடத்தில் நிற்காமல் முன்னும் பின்னுமாய் ஓடி ஊசலாடிக்கொண் டிருந்தன. பெருங் கல் துண்டுகளை அவற்றிற்குத் தடையாக வைத்தும், அவை கள் ஒரே இடத்தில் நின்றபாடில்லை. இப்படி உண்டான அதிர்ச்சியால் கடல் பின் வாங்கிக் கரையைவிட்டு உள்ளே வெகுதூரம் போய் விட்டது. இதனால் நீரில் வாழும் பிராணிகள் அநேகம் உலர்ந்த தரையில் ஒதுக்கப்பட்டுக் கிடந்தன. எரிமலையிலிருந்து அடிக்கடி மேலே எழும்பி வருவதும், முன்னமே குறிப்பித்திருப்பதுமான புகைப்படலமானது, தேவதாருமரத்தை யொத்து, ஆவியோடும், தூசு தும்புகளோடும், நெருப்புக்கற்களோடும், அமைந்ததாய், அம்மலையின் பேரில் ஒரே ஸ்தம்பாகாரமாய்க் கிளம்பி நின்று மேலே சுற்றுப் பக்கத்துப் பிரதேசங்களை ஒரே வளைவாய் வளைத்துக்கொண்டது. இத னிடையில் தோன்றிய மின்னற் கொடிகளோ அதிக பிரகாசமும், சாமானிய மின்னல்களைக் காட்டிலும் நீளமுமுள்ளவைகளாயிருந்தன. மேலும் அதிக பிர காசமுள்ள நெருப்புத்தழல்களும், ஏராளமான சாம்பலும், உருகிய பளபளப் பான கற்குழம்பு வெள்ளமும், அந்த எரிமலையின் உலைவாயிலிருந்து சுற்றி லும் கக்கப்பட்டன. அம்மலையிலிருந்து வீசப்பட்ட நுண்ணிய அணுக்கள் ஆகாயமெங்கும் பரவி அவ்விடத்திய பிரதேசங்களில் மூன்று நாட்கள் வரை யில் இருளாயிருந்தது.

(தொடரும்) A. R. M. உடையப்ப செட்டியார், சொக்கநகரம்.

## அறிஞரின் அமுதமொழிகள்.

(89-ம் பக்கத் தொடர்ச்சி)

101. Be bold as a lion, and dare
Every ill and every dark care !
Look to heaven, in sunshine and shade
And there find your solace and aid.

சிங்கத்தைப்போல் தைரியமாயிரு; என்ன கஷ்டம், கவலை வந்தா லும் தைரியமாய் அவற்றைப் பொறுத்துக்கொள். நல்லது வந்தபோதும் கெட்டது வந்தபோதும் கடவுளை நோக்கு. அப் படிச் செய்தால் மனதுக்கு ஆறுதலும் உதவியும் கிடைக் கின்றன.

102. Never be a coward
In the cause of Right;
Be a valiant soldier
In the world's good fight.

நியாயத்தைச் செய்வதில் எப்போதும் நீ கோழையாயிராதே; உலகத்தின் நன்மைக்கான சண்டையில் மிகுந்த சூரனாயிரு.

103. Home Rule is my Birthright,
and I want it.—*Bal GangadharTilak.*

சுயாட்சியே எனது பிறப்புரிமை ; அஃதெனக்குவேண்டும்.
(திலகர்.)

104. The things that destroy us are injustice, insolence, and foolish thoughts, and the things that save us are justice, self command, and true thought. *Ruskin.*

நம்மைக் கெடுப்பன அநீதி, அகங்காரம், மூட எண்ணங்கள் ஆகிய இவைகளாகும். நம்மைக் காப்பாற்றக்கூடியன நீதி, தன்னடக்கம், உண்மையான எண்ணம் என்பவைகளாகும்.
(ரஸ்கின்.)

105. If people in order to secure redress of wrongs, resorted to Soul-Force, much of the present suffering would be avoided—*M. K. Gandhi.*

ஜனங்கள் தங்களுக்குள்ள குறைகளை நிவர்த்தித்துக்கொள்ள ஆன்மசக்தியைக் கைக்கொண்டால் அவர்களுக்குள்ள குறைகளில் அநேகம் நிவர்த்தியாய்விடும். (காந்தி)

106. Thou Hero, take courage, be proud that you are an Indian; say in pride: "I am an Indian, every Indian is my brother." Say: The ignorant Indian, the poor Indian, the Brahmin Indian, the Pariah Indian, is my brother."—
*Swami Vivekananda.*

ஏ! வீரனே! தைரியமாயிரு. நீ இந்தியன் என்பதற்காகப் பெருமை கொள்வாயாக. "நான் ஓர் இந்தியன் ; ஒவ்வோர் இந்தியனும் என்னுடைய சகோதரன்" என்று பெருமையோடு கூறத் தயங்காதே. "கல்வி அறிவில்லாத இந்தியனும், பிராம்மணனாகிய இந்தியனும், ஆதி திராவிடனாகிய இந்தியனும் என்னுடைய சகோதரர்கள்" என்று கூறிக்கொள்.
(சுவாமி விவேகாநந்தர்.)

(தொடரும்.) A. P. இராமன், B. A.




(72-ம் பக்கத் தொடர்ச்சி.)

## ஆசமன்னியம்.

ஆசமன்னியம் என்பது, ஒரு உத்தரணி ஜலத்தை—அதாவது உள்ளங்கையில் தங்கக்கூடிய அளவு ஜலத்தை, வலது உள்ளங்கையில் வைத்துக்கொண்டு வடதிசைநோக்கி அமர்ந்து, இஷ்டதேவதையை (தமக்கிஷ்டமுள்ள ரூபத்தை) நாவின்கண் அமைத்து அஃதங்கே இருப்பதாகப் பாவனை செய்துகொண்டு, "என் நாவின்கண் வீற்றிருக்கும் அதி தேவதையாகிய நீ, நான் உட்கொள்ளும் ஜலரூபமாக என் நாவையும் என்னையும் இரட்சிக்கக் கடவாய்" என்ற மந்திரம் சொல்லி, உள்ளங்கையிலுள்ள அந்த ஒரு உத்தரணி ஜலத்தை உட்கொள்ளவேண்டும். அப்படி உட்கொண்டால் உட்கொள்ளும் ஜலமும் மனதும் புத்தியும் நாவினிடத்தில் செல்லும். இரண்டாவது உட்கொள்ளும் ஜலம் கண்டத்தில் செல்லும். அப்போது அத்தேவதையைக் கண்டத்திலமைத்து "கண்டத்திற்கு அதிதேவதையாகிய நீ இந்த ஜலரூபமாக என் கண்டத்தையும் என்னையும் சகல வியாதியினின்றும் காப்பாற்றல் வேண்டும்" என்ற மந்திரம் உச்சரிக்கவேண்டும். மூன்றாவது உத்தரணி ஜலம் சாப்பிடும்போது, இருதயத்தில் அந்தத் தேவதையை நிறுத்தி "நீ என்னுடைய இருதயத்தையும் என்னையும் காப்பாற்றவேண்டும்" என்று வாக்கால் அல்லது மனத்தால் தியானித்தல் வேண்டும். நான்காவது உத்தரணிஜலம் சாப்பிடும்போது நாபிஸ்தானத்தில் மேற்படி தேவதா ரூபத்தை அமைத்து "என்னுடைய நாபிஸ்தானத்திற்கு அதிதேவதையாகிய நீ நான் உட்கொள்ளும் ஜலரூபமாய் என்னுடைய நாபிஸ்தானத்தில் சென்று, அந்த நாபிஸ்தானத்தையும், என்னையும் காப்பாற்றவேண்டும்" என்று சிந்திக்க வேண்டும். ஐந்தாவது உத்தரணிஜலம் உட்கொள்ளும்போது மூலாதாரத்தில் அத்தேவதை வடிவத்தை நிறுத்தி "மூலாதாரத்திற்கு அதிதேவதையாகிய நீ இந்த ஜலவடிவமாய் என் மூலாதாரத்தையும் என்னையும் காப்பாற்றுவதுமன்றி என்னிடத்தில் தோன்றும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகியவைகளை நாசப்படுத்தக்கடவாய்" என்று நினைத்தல் வேண்டும். ஆறாவது ஜலம் உட்கொள்ளும் காலத்தில் அத்தேவதையைச் சிரசில் நிறுத்தி, "என் சிரத்திற்கு அதிதேவதையாகிய நீ நான் உட்கொள்ளும் உத்தரணி ஜல ரூபமாய் உட்பிரவேசித்து வீணா தண்டின்வழியாய்ச் சிரசிற்குச் சென்று, என்னையும் என் சிரசிலுள்ள 12-ஆதாரங்களையும் காப்பாற்றி, என்னை உன் ரூபமாக்கக் கடவாய்" என்று சொல்லல் வேண்டும். இத்தகைய சாதனமே ஆசமன்னியம் என்று சொல்லப்படும்.

ஆசமன்னியம் என்பது எத்தனையோ விதங்களாகப் பலரால் அனுசரிக்கப்படுகின்றது. மூன்று மந்திரங்களும் அவற்றிற்கு ஸ்தானங்களும் அமைத்துச் செய்தல் ஒன்று; ஐந்து மந்திரங்களும் அவற்றிற்கு ஸ்தானங்களும் ஏற்படுத்திச் செய்தல் ஒன்று; ஆறு மந்திரங்களும் அவற்றிற்கு ஸ்தானங்களும் குறித்துச்செய்தல் ஒன்று. இவ்வாறு பலர் இஷ்ட பிராப்திக்காக இதனைப் பலவிதமாகச் செய்தாலும், யாவற்றிலும் மேல்சொல்லிய மந்திரமும் இடங்களுமே சிறந்தவை. இவற்றைப்பற்றி ஆரிய பாஷையில் சொல்லும் வார்த்தைகளின் சூட்சும அர்த்தத்தையே நாம் தமிழ்ப்பாஷையில் இங்கு எழுதி யிருக்கின்றோம்.

மேல்நாட்டில் பிரக்கியாதிபெற்ற டாக்டர்-அப்பல்லோ என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட, "சகல வியாதிகளுக்கும் ஜலம் அருந்தும் சிகிச்சை" என்னும் புஸ்தகத்தில், அவர், வியாதிவந்த ஒவ்வொருவரும் சகல ஆகாரத்தையும் தள்ளி சுத்தஜலத்தைக் குறைந்த அளவாக (பிட்பிட்டாக) கொஞ்சங் கொஞ்சமாகப் பருகிவந்தால் சகல வியாதிகளும் நீங்குமென்றும், தாம் அதன்படி அநேக வியாதியஸ்தர்களுக்குக் குணமுண்டாக்கி யிருப்பதாயும், இம்முறையை அனுஷ்டிப்பது ஆயுள்விருத்திக் கேதுவென்றும், மருந்துகளை உட்கொள்வது ஆயுள் க்ஷீணத்திற் கேதுவென்றும், வெகு அழகாகவும், அனுபவமாகவும் எழுதியுள்ளார். மருந்துண்பதில் ஆயுள் எப்படிக் குறைகின்றது என்பதையும் விஸ்தாரமாகக் கூறி யிருக்கின்றார். அவற்றில் ஓர் அம்சத்தை நாம் இங்குக் கூறுவோம் :

இப்போது, மனிதர்க்குச் சாதாரணமாய் உண்டாகும் வியாதிகள் பூராவும் சரீரத்தின் உட்பாகத்தில் சவ்வு, நரம்பு, இரத்தக்குழாய், மாமிசம், இருதயம், நுரையீரல், மண்ணீரல், கல்லீரல், குண்டிக்காய், குடல்கள், நீர்ப்பை முதலான இடங்களில் உண்டாகும் வீக்கம், இரணங்கள் ஆகிய இவைகளினால் உண்டாகின்றன. இடபேதத்தை யனுசரித்து இவைகள் பல பெயர்களால், பலவியாதிகளாகக் கொள்ளப்படுகின்றன. அத்தகைய வியாதிகளை நிவர்த்திசெய்ய வைத்தியர்கள் ஓர் ஔடதத்தை உபயோகிக்கின்றார்கள். எப்படியெனில், சாதாரணமாய் விஷசுரம் என்னும் (மலேரியா) சுரம் ஒருவருக்குக் காணுமாகில் அதற்குக் கொய்னு என்னும் ஒருவித விஷமுள்ள ஔடதத்தை உபயோகிக்கின்றார்கள். அதிலும் இத்தனை குன்றிமணி (கிரெயின் 2 கொண்டது 1 குன்றிமணி) கொய்னு கொடுத்தால் சுரம் நீங்குகின்றது என்றும், இதனால் சுரத்தை நீக்கிவிட்டோம் என்றும் சொல்லுகின்றார்கள். அவ்வாறு சுரம் தீருவது உண்மையே. எனினும், ஓர்பாகத்தில் ஏற்பட்ட இரணமானது ஆறுவதற்காகச் சரீரத்தில் வியாபிக்கும் இரத்தம் பூராவும் கொய்னு விஷமாக மாறும்படி செய்கின்றார்கள். இரணமுள்ளவிடத்தில் வியாபித்த அவ்விஷமானது அந்தப் பாகத்தி லேற்பட்ட இரணத்தைக் குறித்தகாலத்தில் ஆற்றி சுரத்தைக் குணப்படுத்தினும் மற்ற இரணமில்லாத பாகத்தில் வியாபித்த கொய்னு விஷமானது சரீரத்தின் இரக்ஷணைக்குரிய சத்தைக் குறைத்து, சிறிது காலத்திற்குள் வேறு வியாதிகளை உண்டுபண்ணியும் உயிர்

களை வாட்டுகின்றது. ஆனால் வைத்தியர்களாவது வியாதியஸ்தர்களாவது இதைக் கவனிப்பது கிடையாது. வேறு வியாதிகள் வருங்காலத்தில், இது முன்செய்த குற்றத்தால் வந்தது என்னும் ஞானம் இருவர் பாலுமில்லாததால் அவர்கள் ஔடதத்தையே சிலாகிதது உட்கொள்ளுகின்றார்கள் என்றும், ஔடதங்கள் உட்கொள்வதைவிட ஜலத்தை உட்கொண்டு வியாதிகளை நீக்கிக் குணப்படுத்திக்கொள்வதே சாலவும் நன்று என்றும், இச்சிகிச்சையால் வியாதி வளராதெனவும் அந்த டாக்டர் தெரிவிக்கின்றார்.

ஆனால், அவர் சொல்லும் சிகிச்சையை, தாம், ஒருவரே கண்டுபிடித்ததாகவும், அதுவே அதி சிலாக்கியமுடையதென்றும் கூறியிருக்கிறார். ஆனால், இவர் சொல்லும் சிகிச்சை, நோய் வந்தபிறகு செய்யத்தக்கது. மேலும் இதில், உட்கொள்ளும் ஜலம் அளவின்றியும், இன்ன பாகத்திற் செல்லவேண்டுமென்னும் நியமமின்றியும், மனத்தை அதனுடன் சம்பந்தப்படுத்தச் சாத்தியமில்லாமலும் இருக்கின்றது; ஆதலால் அவர் கூறும் ஜல சிகிச்சை சிறந்ததாகாது. அதைவிட ஆயிரமடங்கு, நம் தேசதநில் சர்வசாதாரணமாய் ஒவ்வொருவரும் கட்டாயமாய் அனுஷ்டிக்கவேண்டியதென்று விதித்துள்ள நித்திய கர்மானுஷ்டானங்களில் ஒன்றாகிய ஆசமன்னியம் விசேஷமுடையதென்றே சொல்லல்வேண்டும்.

"இது, நோயில்லாதகாலத்தில் தினப்படி அனுஷ்டிக்கவேண்டிய விதி என்று சொல்லுகின்றீர்களே; அதன்படி நம்மவர்கள் ஏன் செய்வதில்லை? இதற்குக் காரணம் யாது?" என்று சிலர் கேட்கலாம். அதற்குக்காரணம், ஆதியில் தமிழர்களாயிருந்து, ஓர்காலத்தில் ஆரியமதத்தை அனுசரித்து நாளிதுவரை அனுசரிப்பதாகச் சொல்லிவரும் சில தமிழர்களாகிய ஆரியர்களால் ஏற்பட்டுள்ள சூழ்ச்சியேயாம். இத்தகைய காரணங்களால் சகலரும் இதை அனுஷ்டிக்கச் சாத்தியமில்லாமல் போனதோடு எல்லோருக்கும் இது தெரியாமலும் போய்விட்டது. இவ்விஷயத்தைப் பின்பு விஸ்தாரமாக எழுதப் பிரியமிருக்கிறது; ஆதலின் பிராணயாமம் முடிந்தபிறகு இவ்விவரம் எழுதப்படும்.

(தொடரும்) **டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.**

---

## இளைத்த தேகக்காரர்கள் சாப்பிடவேண்டியவை.

இளைத்த தேகக்காரர்கள் கொழுப்பை யுண்டாக்கக்கூடிய ஆகாராதிகளையே சாப்பிடவேண்டும் என்றும், அவ்வாகாராதிகள் தித்திப்பையும் கஞ்சிப்பசையையும் கொண்டனவாய் இருக்கவேண்டும் என்றும், இளைத்த தேக முடைவர்களுக்குச் சரியான ஆகாரம், வெண்ணெய், பால், கோகோ, சாக்கோலேட், ரொட்டி, உருளைக்கிழங்குகள், பருப்புவகைகள், பட்டாணி வகைகள், பீன்ஸ் வகைகள், ஓட்மீல் எனும் தானியம், 'டாபியோகா' என்னும் அரிசி, சப்பரிசி, சர்க்கரையையும் பாலேட்டையும் கொண்ட மாப்பண்டங்கள் (பலகாரவகைகள்), கேக்குகள், மிட்டாய் தினுசுகள், தேன், சர்ப்பத்துகள், தித்திப்பான பழவகைகள் ஆகும் என்றும், ஊறுகாய் தினுசுகளையும், புளிப்புள்ள பழவகைகளையும் சாப்பிடக்கூடாதென்றும், கீரை தினுசுகளை அடிக்கடி சாப்பிடாமல் கொஞ்சமாகச் சாப்பிட்டு வரவேண்டுமென்றும் ஒரு மேல்நாட்டு வைத்திய நிபுணர் தெரிவிக்கிறார்.






ஒரு பிராமணச் சிறுவனுக்கு, சமையல்காரன் சாப்பாடுபோட்டான். அவன் பருப்புப்போட்டு நெய்விடும்போது, பிராமணச் சிறுவன் கண்சிவந்து புலிபோற் சீறிச் சமையற்காரன் கன்னத்தில் பளீரென்று ஓங்கி ஓர் அறை அறைந்தான். சமையற்காரன் பீமசேனனைப்போல் ஆர்ப்பரித்து அவன் கன்னத்தில் நாலு அறை தீர்த்துவிட்டான். இருவருககும் சண்டை பலமாயிற்று. முடிவில் இருவரும் கட்டி உருண்டு புரண்டு தங்களை வேலைக்கு வைத்திருந்த தனவந்தரிடம் போய்ச் சேர்ந்தார்கள். அவர், சண்டையின் காரணத்தை அவர்களிடம் விசாரித்தார்; சமையற்காரன், "நான் ஒரு குற்றமும் செய்யாதிருக்கும்போது இவன் என்னை அறைந்தான்" என்றான். தனவந்தர், "நீ ஏன் அறைந்தாய்?" என்று சிறுவனைக் கேட்டார். சிறுவன், "இந்த மடையன், சூத்திரனுக்கு விடுவதுபோல் எனக்கு ஒரு கரண்டி நெய் விட்டான்" என்றான். அங்கிருந்தவர்களெல்லோரும், "ஓகோ! சூத்திரனுக்கு ஒரு கரண்டி நெய்யும், பார்ப்பனருக்குப் பலகரண்டிகளுமா ஏற்பட்டிருக்கின்றன" என்று கைகொட்டிச் சிரித்தார்கள். இவ்வர்த்தமானம் மெய்யாகவே நடந்தது.

* * *

தெருதிண்ணையில் உட்கார்ந்துகொண்டு தினந்தோறும் தெருவிற் செல்கின்றவர்களிடத்தில் ஓசிப் பொடிவாங்கிப் போடும் ஒருவர் இருந்தார். இவரிடம் எவரேனும் பொடி டப்பியைக் கொடுத்தால் ஒரே பிடியில் அந்த டப்பியைக் காலிசெய்து விடுவார். அதனால் இவர் கையில் பொடி டப்பியைக் கொடுக்க எவரும் அஞ்சுவர். இவருடைய இயற்கை தெரியாத புதுமனிதனொருவன் ஒருநாள் இவருக்கெதிர்ப்பட்டான். இவர் அவனிடம் மூக்குத் தூள் கேட்டார். அவன் மரியாதையுடன் பொடி டப்பியை இவரிடம் கொடுத்தான். இவர் மூன்றுவிரல்களாலும் ஒருபிடி பிடித்தார். டப்பி காலியாகி விட்டது. காலிடப்பியை இவர் அவனிடம் கொடுத்தார். அவனுக்கு வயிற்றெரிச்சல் கிளம்பிவிட்டது. இந்த மூதேவிபிடித்த பயலுக்குப் புத்தி கற்பிக்கவேண்டுமென்று அவன் வீட்டிற்குப்போய் ஐந்தாறு மிளகாய்களை எடுத்துக் கருக வறுத்துத் தூள்செய்து பொடி டப்பியில் அடைத்துக் கொண்டான். புகையிலைத் தூளுக்கும் அதற்கும் வித்தியாசமில்லாமல் அந்தப்பொடி நல்ல வாசனையோடு கூடியிருந்தது. அவன் அந்தப் பொடிடப்பியுடன் ஓசிப்பொடிக்காரரிடம் சென்றான். அவர் வழக்கம்போல் பொடி வாங்கக் கையை நீட்டினார். டப்பிக்காரன் மிளகாய்த் தூள் டப்பியை அவரிடம் கொடுத்தான். அவர் ஒரே பிடியில் பொடி முழுவதையும் அள்ளிக்கொண்டு டப்பியைக் காலியாக்கி அவனிடம் கொடுத்துவிட்டு, அள்ளிய தூளை இரண்டு நாசிகளிலும் ஒரு இழுவை இழுத்தார்; 'அப்பா! செத்தேன்!' என்று கூக்குரலிட்டார். பொடிடப்பிக்காரன் ஓட்டம் பிடித்துவிட்டான். ஓசிப்பொடிக்காரர் ஓயாமல் தும்மிக் காரம் சகிக்காமல் கண்ணீர்விட்டழுது, ஆ! ஆ! என்று கதறி ஒருநாள் முழுவதும் அவஸ்தைப்பட்டுப் பின்னர் விளக்கெண்ணெயை நாசியில் தடவி வெகுசிரமப்பட்டுக் காரத்தைத் தணித்துக் கொண்டார். பின்னர், 'இந்தக் கலிகாலம் போககிரிப்பயல்கள் மிகுந்தகாலமாயிருக்கிறது' என்று பலரிடம் ஓசிப்பொடி கேட்கும் வழக்கத்தை விட்டுவிட்டார்.




## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்

(94-ம் பக்கத் தொடர்ச்சி)

அச்சமயம் பக்கத்தறையிலிருந்து கிளி பயந்து கத்தும் சத்தம் கேட்டது.

கிருஷ்ணஸிங் சட்டென்றெழுந்து "இக்கிளியேன் கத்துகிறது? இதோ அதைப் பார்த்துவிட்டு நொடியில் வருகிறேன்" என்று கூறிக்கொண்டே அடுத்த அறைக்குள் நுழைந்து அதன் கதவை மூடிக்கொண்டு உள்ளே சென்று ஆனந்தஸிங்கை நோக்கி? "என்ன சங்கதி" யென்றான்.

முன்பு கத்திய கிளி ஆனந்தஸிங்கே யென்று நாம் கூறவேண்டியதில்லை. அவன் பலவித பட்சிகளைப்போல சத்தமிடுவதிலும், எந்த மனிதரின் குரலைப்போலும் பேசுவதிலும் நிபுணன். அவன் தன் தந்தையை நடந்த சங்கதி என்னவென்று கேட்காமலே,

"தாங்கள் இக்கேஸை வேண்டாமென்று கூறிவிடத் தீர்மானித்து விட்டீர்கள்" என்றான்.

கிருஷ்ணஸிங் வியப்பும் சந்தோஷமு மடைந்து "ஆம்" என்றான்.

**ஆனந்தஸிங்:**—"நான் அவனை நன்றாய்க் கவனித்துப் பார்த்ததுபோல் தாங்கள் பார்க்கவில்லை" என்றான்.

**கிருஷ்ணஸிங்:**—இருக்கும்.

**ஆனந்த:**—அவனிடம் பேசும்படி எனக்கு அனுமதியளிக்கிறீர்களா?

**கிருஷ்:**—என்ன! உன் தந்தைக்கே கற்றுக் கொடுக்கப்போகிறாயோ?

**ஆனந்த:**—அப்பா! அவ்வாறு கருதவேண்டாம்; என் தந்தையிடம் நான் கற்றுக் கொண்டதன் பயனை யடையப்போகிறேன்.

கிருஷ்ணஸிங் மிக்க சந்தோஷத்தோடு புன்னகை புரிந்துகொண்டே, "நல்லது நல்லது; போ; போய்ப் பேசு. அது வரையில் நான் இங்கிருந்து பார்த்துக்கொண் டிருக்கிறேன்" என்றான்.

ஆனந்தஸிங் "கொஞ்சம் பொறுங்கள்; இரண்டு நிமிடங்களில் வருகிறேன்" என்று கூறிவிட்டு அந்த அறைக்குள்ளிருந்த இன்னொரு சிறிய அறைக்குச் சென்று சற்றுநேரத்தில் திரும்பிவந்து தன் தந்தை யெதிரில் நின்றான்.

கிருஷ்ணஸிங் அவனைக் கண்டதும் மனம் பூரிப்படைந்தான். ஏனெனில் ஆனந்தஸிங் தன் தந்தையைப்போலவே இப்போது மாறுவேட மணிந்திருக்கிறான். இருவரில் உண்மையான கிருஷ்ணஸிங் யாரென்று கண்டு பிடிக்க அவனை யீன்ற தாயாரால் கூட முடியாது.

**ஆனந்த:**—"தந்தையே! என்னை நம்பித் தங்கள் கௌரவத்தை என்னிடம் ஒப்புவிக்கக் கூடுமா?" என்றான்.

**தந்தை:**—"ஆகா. பூரண நம்பிக்கையோடு ஒப்பித்திருக்கிறேன். இனிச் சென்று மிக்க தீக்ஷணியமான உன் கண்களால் கண்டவற்றின் பயனை வெளிக்குக்கொண்டுவா" என்றான்.

## 2-வது அத்தியாயம்.

மறு நிமிடம் ஆனந்தவிங் உலகநாதம்பிள்ளையின் எதிரில் தன் தந்தை யுட்கார்ந்திருந்த அதே நாற்காலியில் உட்கார்ந்தான். இவன் கிருஷ்ணவிங் அல்லவென்று உலகநாதம்பிள்ளைக்கு எள்ளளவு சந்தேகமேனும் உண்டாக வில்லை. உருவம் குரல் ஆடை யாவும் ஒத்திருந்தன.

ஆனந்தவிங் உட்கார்ந்ததும் உலகநாதம்பிள்ளையை நோக்கி, "அய்யா! நான் தங்கள் விவகாரத்தை யேற்றுக்கொள்ளமுடியாது" என்றான்.

பிள்ளை அதைக்கேட்டதே மிக்க கலவரமடைந்து "ஏனையா ஏற்றுக் கொள்ள மாட்டீர்?" என்றார்.

ஆனந்த:—ஏனெனில் நீர் என்னை நம்பவில்லை.

பிள்ளை பின்னும் திடுக்கிட்டு "என்ன! நான் நம்பவில்லையா? தாங்கள் கூறுவதன் அர்த்தம் இன்னதென்று எனக்கு விளங்கவில்லையே" என்றார்.

ஆனந்த:—தாங்கள் என் உதவியைப் பெறுவதென்றால் என்னிடம் நடந்த விஷயங்களை யெல்லாம் மனம் விட்டுக் கூறவேண்டும். தங்கள் நம்பகத்தை யெனக்குக் கூறவேண்டுமென்று நான் கட்டாயப்படுத்தவில்லை. அது தங்கள் பிரியம். ஆனால் என்னை நம்பாமல் அவமானம் செய்ய வேண்டாம்.

உலகநாதம்பிள்ளை மிக்க கலவரமடைந்து, மிக்க ஆவலோடு "அய்யா! தாங்கள் எதைப்பற்றிச் சந்தேகிக்கிறீர்கள்? தங்களுக்கு என்ன சங்கதி தெரியும்?" என்று கேட்டார்.

ஆனந்த:—எனக்கு ஒன்றும் தெரியாது. தாங்கள் யாவற்றையும் என்னிடம் கூறினால் அதன் பிறகே நான் சந்தேகப்படுவதும் இல்லாததும் தெரியும்.

உலக:—அந்தோ! என் மகளே! அய்யா! அவளைப்பற்றி அவசரமாய் ஒன்றும் கருதவேண்டாம்.

ஆனந்த:—உமது புத்திரியைப்பற்றிச் சந்தேகம் கொள்வது என்வேலையல்ல. நீர் எல்லாச் சங்கதிகளையும் ஒளிக்காமல் என்னிடம் கூறினால் நான் உமது புத்திரியைக் கண்டுபிடித்துக் கொடுப்பேன். இது மட்டும் நிச்சயம்.

அவன் கூறியதில் நம்பிக்கையடைந்த பாங்கிக்காரர், "சரி; அப்படியே யாவும் உள்ளபடி கூறிவிடுகிறேன். ஆனால் என் புத்திரியைப்பற்றி அவசரப் பட்டுத் தீர்மானித்துவிட வேண்டாம். அவள் உண்மையில் நிரபராதி; குறைந்தது எண்ணத்திலேனும் நிரபராதி. இன்று காலையில்தான் என் இரும்புப் பெட்டியிலிருந்த இலட்சம் டாலர்கள் (1 டாலர் ரூ. 3-2-0) நோட்டுகளும் பாங்கி யுண்டிகளுமாய்க் களவு போய்விட்டனவென்பது தெரியவந்தது.

ஆனந்:—அவைகளின் நம்பர்கள் தெரியுமோ?

உலக:—இல்லை.

ஆனந்:—கிடக்கிறது. பெட்டி யெப்படித் திறக்கப்பட்டது?

உலக:—சரியாகத்தான். அதன் இரகசியப் பெயரின்படி திறக்கப்பட்டது. முரட்டுத்தனமாயல்ல.

ஆனந்:—தாங்கள் அதைப் பூட்டாது விடவில்லையே?

உலக:—இல்லை யில்லை. இன்றுநான் காலையில் பார்த்தபோது அதுமூடப் பட்டே யிருந்தது.

(தொடரும்) ஆரணி. குப்புசாமி முதலியார்.



# வர்த்தமானப்பகுதி

**எலக்டிரிக் விநோதப்புழு:**—சேலம்ஜில்லா, ராசீபுரம் தாலூகா, சீராப் பள்ளிக்கிராமத்தில் சில தினங்களுக்குமுன் ஒருநாளிரவில் 1-அடிச் சுற்றளவு பரவிய பிரகாசமொன்று ஓரிடத்தில் காணப்பட்டதாகவும், அது நாகரத் தினமாயிருக்குமென்றும், நாகம் அதைக் கக்கி வைத்துவிட்டு இரை தேடப் போயிருக்குமென்றும் நினைத்து அதைக்கண்ட ஜனங்கள் பயந்து அதன் சமீபத்தில் போகாமலிருந்ததாகவும், பின்னர்ச் சிலர் மண்ணைவாரி அதன் மேல் இறைத்ததாகவும், அப்பொழுதும் அப்பிரகாசம் இருந்தவிடத்திலேயே இருந்ததாகவும், அதன்மேல் சிலர் தைரியங்கொண்டு அவ்வெளிச்சத்தின் சமீபத்தில் சென்று அதைப் பார்த்ததாகவும், அங்கே 3-அங்குல நீளமும், ½-அங்குல அகலமுமுள்ள புழுவொன்று கிடந்ததாகவும், அதன் உடம்பில் பின்புறத்திலிருந்தே அந்தப்பிரகாசம் உண்டாகிக்கொண்டிருந்ததென்றும், இத்தகைய விநோதப்புழுவை இதுவரை கண்டதில்லையென்றும், இதை எலக்டிரிக் புழுவென்று பலர் சொல்லுகிறார்களென்றும் நம் சந்தாதார் சி. ஓ. சீரங்கசெட்டியார் தெரிவிக்கிறார்.

* * * *

**மின்சார அதிசயங்கள்:**—அமெரிக்காதேசத்தில் வெஸ்டிங்கவ்ஸ் மின்சார கம்பெனியில் ஆராய்ச்சி இன்ஜினியராயிருக்கும் மிஸ்டர் நௌலஸ் என்பவர், மின்சாரத்தினால் ஒரு திருடனை, அந்தத் திருடனின் நிழலிலிருந்து கண்டுபிடிப்பதற்கும், எண்ணெய் டாங்கிலுள்ள எண்ணெயோ அல்லது காஸ்டாங்கிலுள்ள காஸோ தீப்பிடித்து எரிகையில் அதை உடனே அவிப்பதற்கும், ஜலகடத்திலோ அல்லது அடுப்பிலோ தீயை அதிகப்படுத்துவதற்கும், அல்லது குறைப்பதற்கும், ஓடும் இரயில் வண்டியை ஒருதுளி பனித் தண்ணீரைக்கொண்டு நிறுத்துவதற்கும் வழிகள் கண்டுபிடித்திருக்கிறார். அவர் கண்டுபிடித்திருக்கும் முறையைக் கொண்டு இன்னும் பல காரியங்கள் செய்யப்படலாமென்று அறிஞர் கூறுகின்றனர். அவருக்கு வயது 28.

* * * *

**புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட எண்ணெய்:**—சீனதேசத்தில் இப்போது வசித்துவரும் ருஷ்யாதேசத்து இன்ஜினியர் ஒருவர் மோட்டார் வண்டிகளுக்கு உபயோகப்படக்கூடிய ஒரு புதிதான எண்ணெயைத் தயார் செய்வதற்கு வழிகண்டு பிடித்திருக்கிறாராம். மோட்டார் வண்டிகளுக்கு இப்போது உபயோகப்படுத்தப்படும் எண்ணெய் நாளடைவில் விலக்கப்பட்டு மேற்கூறப் பட்டுள்ள எண்ணெயே பிற்காலத்தில் எங்கும் மோட்டார் வண்டிகளுக்கு உபயோகப்படுத்தப்படலாமென்று பல அனுபவசாலிகள் கருதுகிறார்கள். இந்த எண்ணெய் சீனாவில் மன்சூரியா என்னும் பாகத்தில் ஏராளமாக விளையும் ஒருவிதமான செடியில் உண்டாகும் விதையிலிருந்து பிழிந்து எடுக்கப் படுகிறது. அவ்வாறு எடுக்கப்படும் விஷயத்தில் சொற்பச் செலவுதான் ஏற்படுகிறது. இந்த விதையிலும் எண்ணெயிலும் அதிக சத்து இருக்கிறது.

* * * *

**வால்முளைத்த பெண்:**—இங்கிலாந்தில் போல்க்ஸ்டோன் என்ற இடத்தில் ஒரு பெண்குழந்தை இரண்டங்குல நீளமுள்ள வாலுடன் பிறந்ததாம். ஆனால் வைத்தியர்கள் அதனை நீக்கிவிட்டார்களாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

பிரபவஹு ஐப்பசிமூ—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,
பசலி 1337—கொல்லமாண்டு 1103—ஹிஜரி 1346,
இங்கிலீஷ் 1927ஹு அக்டோபர்மூ—நவம்பர்மூ

| ஐப்பசி | அக்டோபர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங் | சப்5-30 | புன48-5 | சி48-5அ | துலாரவி நாழி-4-13-வி, விஷு புண்ணியகாலம் |
| 2 | 18 | செ | அஷ்5-18 | பூசம்50-43 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 3 | 19 | புத | நவ6-53 | ஆயி54-48 | சித்60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 4 | 20 | வியா | தச9-55 | மக59-50 | அ59-50சி | தானியம் செலவிட |
| 5 | 21 | வெ | ஏகா14-10 | பூர60 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 6 | 22 | சனி | து19-15 | பூர6-25 | சி6-25ம | கரிநாள், சனிப்பிரதோ |
| 7 | 23 | ஞா | திர25-0 | உத்13-23 | அமி60 | மாசசிவராத்திரி [ஷம் |
| 8 | 24 | திங் | சது31-15 | அஸ்20-43 | சி20-43பி | தீபாவளி பண்டிகை |
| 9 | 25 | செவ் | ●37-38 | சித்28-15 | சித்60 | சர்வத்திர அமாவாசை, கேதார கௌரி விரதம் |
| 10 | 26 | புத | பிர43-55 | சுவா35-43 | சித்60 | கார்த்திகசுத்தம் |
| 11 | 27 | வியா | துதி50-3 | விசா43-5 | சித்60 | சந்திரதெரிசனம் |
| 12 | 28 | வெ | திரி55-38 | அனு49-58 | சி49-58ம | ஆலோசனகௌரி விரதம் |
| 13 | 29 | சனி | சது60 | கேட்56-15 | சித்60 | நாகசதுர்த்தி விரதம் |
| 14 | 30 | ஞா | சது0-25 | மூல60 | அமி60 | தானியம் செலவிட [ரம் |
| 15 | 31 | திங் | பஞ்4-8 | மூல1-15 | சி1-15ம | கந்தர்சஷ்டி, சூரசம்மா |
| 16 | நவம்பர் 1 | செவ் | சஷ்6-20 | பூரா4-55 | சி4-55அ | |
| 17 | 2 | புத | சப்6-50 | உத்7-28 | அ7-28சி | |
| 18 | 3 | வியா | அஷ்5-25 | திரு7-10 | சித்60 | |
| 19 | 4 | வெ | நவ2-10 தச57-5 | அவி5-33 | சித்60 | |
| 20 | 5 | சனி | ஏகா50-28 | சதை2-8 பூரட்57-3 | அமி2-8ம | |
| 21 | 6 | ஞா | து42-25 | உத்50-48 | அமி60 | |
| 22 | 7 | திங் | திர33-43 | ரேவ43-40 | சித்60 | |
| 23 | 8 | செவ் | ச○24-20 | அஸ்36-13 | சித்60 | |
| 24 | 9 | புத | பவு14-53 | பர✕28-45 | சி28-45அ | கிருத்திகை, கதிரறுக்க |
| 25 | 10 | வியா | பிர6-3 துதி57-58 | கிரு21-53 | மர60 | கார்த்திகபகுளம், கார்த்திக சாதுர்மா |
| 26 | 11 | வெ | திரி51-0 | ரோ15-58 | ம15-58சி | கதிரறுக்க, மாடுவாங்க |
| 27 | 12 | சனி | சது45-43 | மிரு11-25 | சித்60 | யாத்திரை பிரயாணம் |
| 28 | 13 | ஞா | பஞ்42-13 | திரு4-8 | சித்60 | கதிரறுக்க [செய்ய |
| 29 | 14 | திங் | சஷ்40-38 | புன7-28 | அ40-38சி | மாடுவாங்க |
| 30 | 15 | செவ் | சப்41-5 | பூசம்8-23 | சித்60 | கிருஷ்ணஷ்டமி, காள பைரவாஷ்டமி |

| | | | |
|---|---|---|---|
| குரு | | ராகு | |
| | 7உ விரு-புத<br>15,, கன்-சுக்<br>20,, து-வ-பு | | |
| | | | சுக் |
| | சனி<br>கே | சூ-பு<br>செவ் | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.